# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"





கூத்தாடும் பிள்ளையார்

மாலை 10] கீலக - ஆவணி - செப்டம்பர், 1968 [மணி 12

சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத் துறை வெளியீடு



தருமபுர ஆதீனத்தின் அருளாட்சியில் உள்ள திருப்பனந்தாள் செஞ்சடையப்பர் கோயிலில் நிகழ்ந்த திருக்குட முழுக்கு விழாவிற் கலந்துகொண்டு மகிழ்ந்து சிறப்பித்த பெருமக்கள் (5—5—68)

## பொருளடக்கம்



## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

**ஆண்டுச் சந்தா ரூ. 10/-**

**தனி இதழ் விலை ரூ. ஒன்று**

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள் "திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34" என்னும் முகவரிக்கு ரூபா பத்து அனுப்பி, எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையாளர்களின் அலுவலகங்களிலும், மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்துதவுதல், இதழ்கள் தவருமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

—ஆசிரியர்.





திருக்கோயில்
திங்கள் வெளியீடு

மாலை 10] கீலக - ஆவணி - செப்டம்பர், 1968 [மணி 12

# தமிழும் சைவமும்

" ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் ;—
ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிர்ஒன் றேனையது
தன்னேர் இலாத தமிழ். "
—தண்டி யலங்காரம்.

**முன்னுரை :**

இங் நிலவுலகின்கண் உள்ள பற்பல நாடுகளிலும் எத்துணையோ பல நூற்றுக் கணக்கான மொழிகள் வழங்கி வருகின்றன. சிறுசிறு கிளை மொழிகளைத் தவிர்த்து உலகில் இதுபோழ்து வழங்கிவரும் மொழிகள் ஏறத்தாழ 2796 என்று, மொழி நூற்றுறை யறிஞர்கள் ஒருவாறு கணக்கெடுத்திருக்கின்றனர் (1). அவைகள் அனைத்தும் ஒரே தரத்தன அல்ல. தத்தமக்கு அமைந்த இயல்புகளுக்கு ஏற்ப, அவைகள் வெவ்வேறு படிநிலைகளை யுடையன· அவற்றுள் மிகப் பெரும்பாலானவை 'திருந்தா மொழிகள்' என்னும் வகையைச் சேர்ந்தனவாகலாம். 'திருந்திய மொழிகள்' எனக் குறிப்பிடத் தகுந்த சிறப்புடைய மொழிகள் ஒரு சிலவே யாதல் கூடும். அவற்றுள்ளும் இலக்கண இலக்கிய நலங்களிற் சிறந்து, பழமையும் பெருமையும் அருமையும் வாய்ந்தவை மிகச் சிலவாகவே இருக்கும். அவை தம்முள்ளும் ஒரு சிலவே 'உயர்தனிச் செம்மொழிகள்' எனப் புகழ்ந்து போற்றத்தக்கனவாகத் திகழ்கின்றன. அவ்வொருசில உயர் தனிச் செம்மொழிகளிலும்கூட, எத்துணையோ பல மொழிகள் வழக்கிழந்து நிற்க, அமிழ்தினும் இனிய நமது அருமைத் தமிழ்மொழி யொன்றே, பல்லாயிரம் ஆண்டுகளாக உலக வழக்கு - நூல் வழக்கு என்னும் இருதிற வழக்கிலும், தொன்று தொட்டு இன்றுகாறும் நின்றுநிலவி, இளமை யாற்றலோடு வளங் குன்றுது இனிது வழங்கி வளர்ந்து வருகின்றது.

இற்றைஞான்று உலகம் முழுவதிலும் பேசப்பட்டு வரும் பெருமொழியாகப் பிறங்கும் ஆங்கில மொழியானது, இருநூறு-முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் மிக எளிய நிலையிலேயே இருந்து வந்தது (2). ஒரு சிறு தீவின் மக்கட் கூட்டத்தினரால் மட்டும் பேசப்பெற்று வந்த அம்மொழியானது, உலகெங்கணும் வழங்கத்தகும்

(1) "Gray's Foundations of Language tentatively places the total number of present day spoken languages, exclusive of minor dialects, at 2796........"

Mario Pei, The world's Chief Languages, p. 15.

(2) "Only two or three centuries ago, English was spoken by so few people that no one could dream of its ever becoming a world language."

—Otto Jespersen, Growth and Structure of the English Language, p. 260.

பெருமொழியாகிவிடும் என்று அந்நாளில் எவரும் கனவுகூடக் கண்டதில்லை! இங்ஙனமே, நம் இந்திய நாட்டிலும் ஒரு சில மொழிகள் மிக அண்மைக் காலத்தில் தோன்றியனவே யாகும். சௌராட்டிர மக்களின் மொழிக்குச் சென்ற நூற்றாண்டில்தான் (கி. பி. 1870), எழுத்துக்கள் தோற்றுவிக்கப்பட்டன என்பர். இன்னோரன்ன செய்திகள் பலவும் கருதியுணருங்கால், தமிழ் மொழியின் தனிப்பெருஞ் சிறப்பியல்புகள் பலவும் நம்மனோர்க்கு விளங்கும்.

## தமிழ் இலக்கணம் :

இங்ஙனம் தமிழுக்கே தனிச் சிறப்பாக உரிய பலவகைப் பெருமைகளுள், அதன் சீரிய இலக்கண அமைப்பும் ஒன்றாகும். அது பற்றியே,

"கண்ணு தற்பெருங் கடவுளும்
கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்த இப்
பசுந்தமிழ், ஏனை
மண்ணி டைச்சில இலக்கண
வரம்புஇலா மொழிபோல்
எண்ணி டப்படக் கிடந்ததா
எண்ணவும் படுமோ ?"

என ஆசிரியர் பரஞ்சோதி முனிவர், அதன் சீரிய இலக்கண அமைப்புத் திறம் குறித்துப் பாராட்டி யுரைப்பாராயினர்! "தமிழ் மக்களைப்போல இலக்கணத்தினை அன்பும் ஆர்வமும் கொண்டு, திட்ப நுட்பம் செறிய மிகவும் நுணுகிக் கற்றுணர்ந்து இன்புற்றவர்கள் உலகிலேயே வேறு பிறர் இல்லை எனலாம். மொழியின் இலக்கண அமைப்புக்களை நுணுகி நுணுகி மிகவும் ஆராய்ந்து பயின்று வந்ததனால், தமிழர்களின் அறிவு மிகக் கூர்மை யடைந்து வளர்ந்ததுடன், அவர்களுடைய மொழியும் திருத்தமுற்றுச் செம்மை எய்தித் திகழ்வதாயிற்று" எனப் பேரறிஞர் திரு. கால்டுவெல் அவர்கள் பாராட்டியுரைக்கின்றார்.

## தமிழின் சிறப்பியல்புகள் :

உலகின்கண் உள்ள ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொருவகைச் சிறப்பியல்பு உண்டு. அவ்வகையிற் கருதின், எல்லா மொழிகளும் தம்முள் ஓராற்றால் ஒத்த தன்மையுடையனவே என்பதில் ஐயமில்லை. ஆயினும் தமிழ்மொழியானது தனக்கெனப் பல தனிப்பெருஞ் சிறப்பியல்புகளையுடையதெனக் குறிப்பிடுதல் இழுக்காகாது.

(1) தமிழில் உள்ள எழுத்துக்களெல்லாம் மக்களுடைய நாவின் இயல்பையும் ஒலியின் இயல்பையும் ஆராய்ந்தறிந்து, இயற்கை நெறிக்கு ஏற்ப அமைக்கப்பட்டுள்ளன. தமிழில் வழங்கும் எந்தச் சொற்களின் முதலினும் **ட்ண்ர்ல்ழ்ள்ற்ன்** என்னும் எட்டெழுத்துக்களும் நிற்கப் பெறா எனத் தமிழிலக்கண நூல்களில் ஒருவிதி காணப்படுதல், அவற்றை எளிதின் உச்சரிக்க மாட்டாத குழந்தைமைப் பருவ நிலையில் மக்கள் இருந்த பழங்காலத்தில் தமிழ் தோன்றியது என்பதற்கு அறிகுறியாகும்.

"வையம் ஈன்றதொன் மக்கள் உளத்தினைக்
கையி னல்உரை காலம் இரிந்திடப்
பைய நாவை அசைத்த பழந்தமிழ்
ஐயை தாள்தலைக் கொண்டு பணிகுவாம்"

—தமிழ்த்தாய் வாழ்த்து

(2) உரப்பல் கனைத்தல் முதலிய அரிய முயற்சிகள் இன்றி, எளிமையும், இனிமையும் அமையத் தமிழ் எழுத்துக்களை யாவரும் ஒலித்தல் இயலும்.

(3) தமிழ் எழுத்துக்களின் ஒலியமைப்பியற்கை, தமிழ் மக்கள் வேறு பிற அயல் நாட்டு மொழிகளின் ஒலிகளையும் நன்கினிது திறம்பட எளிதாக ஒலிப்பதற்குத் துணைபுரியக் கூடியதாகத் திகழ்கின்றது.[3]

(4) ஆங்கிலம் முதலிய மொழிகளில் ஓரெழுத்தே பலவேறு ஒலிகளைக் குறிக்கப் பயன்படுவதுபோல் அன்றி, 'ஓரெழுத்துக்கு ஓரொலி' என்னும் அறிவுநெறிக் கொள்கைக்குப் பெரும்பாலும் முரண்படாமல் தமிழ் எழுத்துக்கள் அமைந்துள்ளன.[4]

---

(3) "The rich variety of sounds of Tamil is such that its speakers can adopt themselves with comparative ease to the sounds of many foreign tongues."

(4) "One letter, one sound is the scientifically best phonetic rule."

(5) ஒருசில மொழிகள் தமக்கேயுரிய எழுத்தமைப்பினை யுடையன அல்ல. எடுத்துக்காட்டாக, இட்டலியன் பிரெஞ்சு ஸ்பானிஷ் ஆங்கிலம் முதலிய மொழிகள் தமக்கெனத் தனித்தனியே எழுத்தமைப்புக்களைப் பெருமல், ஒரேவகை நெடுங் கணக்கினையே (Alphabet) கையாளுகின்றன. தெலுங்கு எழுத்துக்களையே கன்னடமும் பயன்படுத்துகின்றது. தமிழ் மொழியோ மிகப் பழங்காலந்தொட்டே தனக்கெனவுரிய ஒருதனி எழுத்தமைப்பை உடையதாக விளங்கி வருகின்றது.

(6) ஆங்கிலத்தில் 'அச்செழுத்து வகை' 'கையெழுத்து வகை' என இரு வேறு பிரிவுகள் உள்ளன. அரபிய மொழியில், மொழியின் முதலிடை கடைகளில் வரும் முறைகளுக்கேற்ப, மெய்யெழுத்துக்கள் நான்கு வேறு வடிவங்களைப் பெறுகின்றன. மேலும், ஒருமொழியே அதனைப் பேசும் மக்களின் மதம் பண்பாடு முதலிய வேறுபாடுகள் காரணமாக வெவ்வேறு வகையான எழுத்துக்களால் எழுதப்படுவதுண்டு. தமிழில் அத்தகைய நிலைகள் எதுவும் இல்லை.

(7) சில மொழிகளில் எழுதுவது ஒரு வகையும், ஒலிப்பது பிறிதொரு வகையுமாக உள்ளது. ஆங்கிலத்தில் Put, But, Depot, often, முதலிய யாவரும் அறிந்த சொற்களே, இவ்வுண்மையை விளக்கப் போதிய சான்ருகும். ஜெர்மன் மொழியில் 'ரூட்டர்' (Reuter) 'ஃப்ரூட்' (Freud) என எழுதிவிட்டு,'ராய்ட்டர்'(Roiter) 'ஃபிராய்ட்' (Froid) என ஒலிக்கின்றனர். இங்ஙனம் எழுதுவது ஒரு வகையும் ஒலிப்பது பிறிதொரு வகையுமாக இருத்தலால் (5), நேரும் இடர்ப்பாடுகட்கு எல்லையே இல்லை. ஒலிப்புக்கென்றே மிகப் பெரிய விளக்க நூல்கள் வெளியிடவேண்டிய இன்றியமையாமை, ஆங்கிலம் முதலிய மொழிகளில் காணப்படுகின்றது. வல்லொலி மெல்லொலி மாற்றம் தவிர, இத்தகைய குறைபாடுகள் தமிழில் இல்லை எனத் துணிந்து கூறலாம்.

(8) தமிழ் எழுத்துக்கள், அவை தோன்றும் நெறிக்கு ஏற்ப அறிவார்ந்த முறையில் ஒழுங்குற வரிசைப் படுத்தப் பட்டுள்ளன. அவ்வரிசை முறைக்குரிய காரணங்களை உரையாசிரியர்கள் செவ்விதின் விளக்கியுள்ளனர். ஆனுல் ஆங்கிலம் முதலிய மொழிகளில் A B C D E என வழங்கும் வரிசை முறைக்குரிய காரணம் ஏதும் இருப்பதாகப் புலப்படுத்தப் பெறவில்லை.

(9) தமிழிலுள்ள சொற்கள் எல்லாம் இயல்பாக மிகக் குறுகியனவாய், ஓரசை ஈரசைகளாலேயே பெரும்பாலும் இயன்றுள்ளன. 'நாகரிகம் எய்தப் பெருத எளிய மக்கள் பேசும் மொழியின் சொற்கள், அவர்கள் கையாளும் கருவிகளைப் போலவே திருத்தமும் செம்மையும் பெருமல், மிக நீளமாக இருக்கும்' என்பது மொழிநூல் அறிஞர்கள் கண்டறிந்த உண்மையாகலின், தமிழில் வழங்கும் சிறு சிறு சொல்லமைப்பே அதன் பழம்பெரு நாகரிகத்தினையும் பண்பாட்டினையும் அறிவிக்கும் சான்ருக அமையும்.

(10) தமிழிற் பகுத்தறிவுடைய மக்களை உயர்திணை என்றும், பகுத்தறிவில்லாத உயிரையும் உயிரில்பொருள்களையும் அஃறிணை என்றும், பாகுபாடு செய்து விளக்கியிருப்பது பாராட்டற்குரியதாகும்.

(11) அங்ஙனமே சொல் நோக்கி ஆணைப் பெண்ணுகவும், பெண்ணை ஆணுகவும், இரண்டையும் அலியாகவும் மனஞ்சென்றவாறு செயற்கைப் போலி நெறியிற்

---

(5) "In the English tongue we speak
Why is 'break' not rhymed with 'freak'?
Well, you tell me why it is true,
We say 'sew' but likewise 'Jew'?

'Beard' sounds not the same as 'heard'.

'Cord' is different from 'word'.
And since 'pay' is rhymed with 'say'
Why not 'paid' with 'said', I pray?
'Cow' is 'Cow', but 'low' is 'low'.

'Shoe' is never rhymed with 'foe'.
And in short, it seems to me
Sound and letters disagree...

—Lord Crower

"The English spelling is an international disaster"

—G. B. Shaw

கூறியொழிந்து பிழைபடாமல், பொருள் நோக்கி இயற்கைக்கு ஏற்பத் தமிழிற் பால்கள் வகுக்கப்பட்டுள்ளமையும் மிகவும் மகிழ்தற்குரிய செய்தியாகும்.

(12) தமிழில் உள்ள படர்க்கை வினை முற்றுச் சொற்கள்,திணை பால் எண் இடம் காலம் என்பவற்றைக் காட்ட வல்லன வாக விளங்குதல்போல, வேறு சில மொழி களிற் காண்டல் அரிது. ஒரு சில மொழி களில் பெயர்ச்சொற்கள் மட்டுமேயன்றிப் பெயர்களைத் தழுவி வரும் உரிச்சொற் களும்கூட, வேற்றுமை யுருபுகள் ஏற்ப துண்டு. அத்தகைய இடர்ப்பாடுகள் தமி ழில் இல்லாமை கற்பார்க்கு எளிமை பயக் கின்றது.

(13) தமிழ்ச் சொற்களின் பகுதி விகுதி முதலிய உறுப்புக்கள் மிக எளியவரும் தாமே கருதி யுணர்ந்துகொள்ளத் தக்க இயல்புடையன. பிற சில மொழிகளிற் போலச் செயற்கை நெறிகளிலும், வெறும் கற்பனை முறைகளிலும், சொற்களின் பகுதி விகுதிகள் தமிழில் வகுக்கப்பட்டில் லாமை, அறிவு வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிகின்றது.

(14) 'பன்னீருயிரும் கசதந பமவய ஞ ங ஈரைந்து உயிர் மெய்யும் மொழி முதல்' எனச் சொற்களின் முதலில் வருவன 22 எழுத்துக்களே எனவும், 'ஆவி ஞணநமன யரலவழள மெய் சாயும் உகரம் நாலாறும் ஈறே' எனச் சொற்களின் இறுதியில் வருவன 24 எழுத்துக்களே எனவும் பிற வாறும், தமிழிலக்கணம் ஆராய்ந்து அளந்து கூறியிருப்பது, மிகவும் வியக்கத் தக்க செய்தியாகும்.

(15) ஆசிரியர் சிவஞானசுவாமிகள் தமது 'தொல்காப்பியப் பாயிர விருத்தி' யில் 'தமிழ் மொழிப் புணர்ச்சிக்கட் படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக் குறிப்பு வினைத் தொகை முதலிய சொல் லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம் புறம் என்னும் பொருட் பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப்பாகுபாடு களும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும், இன்னோ ரன்ன பிறவும் பிறமொழியிற் பெறப்படா' எனக் கூறியிருப்பது ஈண்டுக் குறிக் கொள்ளத் தக்கது.

(16) நன்னூல் இயற்றிய ஆசிரியர் பவணந்தியார் இடுகுறிப் பெயர் உடன்பட் டனராயினும், 'மொழிப் பொருட் காரணம் விழிப்பத்தோன்ரு' எனவும், 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என வும் ஆசிரியர் தொல்காப்பியர் அருளிச் செய்திருத்தலின், தமிழில் எல்லாச் சொற் களும் அறிவார்ந்த முறையிற் காரணம் பற்றி அமைந்தனவே என்பது அறியப் படும். 'ஆசிரியர் தொல்காப்பியனார் யாதானும் ஓர் காரணம் பற்றியே குறி யிட்டு ஆளுதல் அல்லது, பிற சில மொழி யாளர் போலக் காரணம் பற்ருதும் குறி யிட்டு ஆளுதல் யாண்டும் இல்லை' எனச் சிவஞான சுவாமிகள், தமது 'தொல்காப் பிய முதற் சூத்திர விருத்தி'யிற் குறித் திருப்பதும் ஈண்டுநாம் உணர்தற்கு ஏற் புடையது.

(17) ஏனைய மொழிகள் எல்லாம் எழுத்து சொல் சொற்றொடர் செய்யுள் என்பன போன்றவற்றிற்கு மட்டுமே, ஓரளவு இலக்கணம் உடையனவாக, அவற்ருற் குறிக்கப்படும் பொருளுக்கும் கூடத் தமிழ்மொழி இலக்கணம் வகுத் திருக்கின்றது. 'பொருள் இலக்கணம்' என்பது தமிழ்மொழியில் மட்டுமே உள்ள சிறப்புக்கூறு ஆகும். அது பற்றியே யன்றோ, "தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழ்" எனத் தமிழ் மொழியினைச் சான்றோர்கள் போற்றுவாராயினர் என்பது.

'வழுத்துபெரு மாண்புடைய மற்றைமொழிகள்
எழுத்தொடு சொல்லின் இயல்பே—முழுத்தும்
எடுத்துரைக்க மாட்டா தினைப்பப் பொருளும்
தொடுத்துரைக்கும் தூய தமிழ்' —ஆசிரியர்.

(18) மக்களின் வாழ்க்கையை அகம் புறம் என இரண்டாக வகுத்து, மக்களா யினர் தம் வாழ்க்கையில் இன்றியமையாது எய்தற்பாலனவாகிய அறம் பொருள் இன் பம் வீடு என்பனவற்றையும், அவற்ருேடு தொடர்புடைய காதல் வீரம் முதலிய பற் பல செய்திகளையும் எல்லாம், 'புலனெறி

வழக்கம்' பற்றி, மிகவும் விரிவாக விளக்கிக் கூறியிருப்பது தமிழிலக்கணத்தின் தனிப் பெரும் சிறப்பியல்புகளு ளெல்லாம் தலை சிறந்த தொன்ருகும்.

(19) உலகத்திற் பல மொழிகள் காலத் திற்குக் காலம் திரிந்து சிதைந்து மாறுபடு கின்றன. **போவுல்ப் கேடிமான்** காலத்தில் வழங்கிய ஆங்கில மொழி சாசர் காலத் திலும், சாசர் காலத்திய மொழி செகப் பிரியர் காலத்திலும், செகப் பிரியர் காலத்து மொழி **தேனிசையன்** காலத்தி லும், எத்தனை எத்தனையோ மாறுதல்களை அடைந்துள்ளன. ஆனல் தமிழ்மொழி யானது கடந்த இரண்டாயிரம் மூவாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகவே மாருமலும், சிதையாமலும், ஒரே நிலையிற் **கன்னித் தமிழ்** என்பதற்கு ஏற்ப, இன்றும் யாவர்க் கும் எளிதிற் புரியும்படியாக நிலைபெற்று நிலவி வருகின்றது. உலக மொழிகளின் வரலாற்றில், இஃதொரு விந்தைமிக்க பெருஞ் செய்தியாகும். 'பிரித்தானியக் கலைக்களஞ்சியம்' தானும், தமிழின் இவ் வியல்பைப் போற்றிக் குறிப்பிட்டுள்ளது.

(20) ஆங்கிலம் உலகப்பெருமொழி களுள் ஒன்ருக இன்று திகழ்கின்றதெனி னும், அதன் இலக்கணம் இன்னும் போதிய திருத்தமும் செம்மையும் எய்தவில்லை என, ஜார்ஜ் பெர்னுர்ட்ஷா முதலிய ஆங்கில அறிஞர்கள் பலர், கூறி வருகின்றனர். ஆனல் ஏறத்தாழ மூவாயிரம் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, தமிழில் **தொல் காப்பியம்** என்னும் தூய சிறந்த முழுமுதல் இலக்கண நூல் அமைந்திருப்பது, தமிழ் மக்களின் தவப்பேறு என்றே கூறுதல் வேண்டும். பழந்தமிழ் மக்கள் கண் டுணர்ந்து கடைப்பிடித்த நூற்பா அமைப்பு, சுருங்கச் சொல்லல்—விளங்க வைத்தல்—நவின்ருேர்க்கினிமை-நன்மொழிபுணர்த்தல் ஓசையுடைமை-ஆழமுடைத்தாதல் முத லிய பத்துவகை அழகுகளும் பயின்று, எத்துணை மாட்சிமை மிக்கு இலங்குகின் றது! நூற்பாக்களைக் காரண காரியமுறை பிறழாமலும், முன்னெடு பின் முரணுமலும் பிறவாறும் அமைத்திருக்கும்திறமும், அவற் றிற்கு இளம்பூரணர் சேனுவரையர் பேரா சிரியர் நச்சினுர்க்கினியர் முதலானேர் வரைந்திருக்கும் அரிய பெரிய உரை விளக்கங்களும் பிறவுமெல்லாம், நினைத் தொறும் நினைத்தொறும் வியப்பும் விம்மி தமும் விளைக்கவல்லன அன்ருே? சுருங்கக் கூறலுறின், தமிழிலக்கண அமைப்பினை ஆராய்வதொன்றே, தமிழ் மக்களின் அறி வாராய்ச்சித் திறனையும், நாகரிக மேம் பாடுகளையும் அளந்தறிந்துணர்ந்து கொள் ளுதற்குப் போதிய எளிய இனிய உறு பெரும் கருவியாகும் எனலாம்.

**எழுத்துக்கள்:**

தமிழிலக்கணத்தில் எழுத்துக்களுக்குப் பெயர் அமைத்திருக்கும் முறையே, தமிழ் மக்களின் நுண்மாண் நுழை புலத்தினை நுனித்துணர்த்த வல்லதாயுள்ளது. தாமே தனித்து இயங்கவல்ல எழுத்துக்களுக்கு **'உயிர்'** என்றும், உயிரோடுகூடியல்லது இயங்கலாற்ருத எழுத்துக்களுக்கு **'மெய்'** என்றும், உவம ஆகுபெயராற் காரணம் பற்றிப் பெயர்கள் அமைக்கப்பட்டுள்ளன. தமிழ் மக்களின் தலைசிறந்த தத்துவ ஞானத்தினை இப்பெயர்கள் தகவுற இனிது விளக்குகின்றன[6].இப்பெயர்களின் குறிப்புக்களுக்கு முன்னெடு பின் சிறிதும் முரணுமல்,தமிழில் எழுத்திலக்கணம்வகுக் கப்பட்டுள்ளது. க்ருபை, த்யானம் முதலிய வடசொற்களிற்போல, மெய்யெழுத்துக் கள் தமிழில் மொழி முதற்கண் வருவ தில்லை. 'உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா' என்பது தொல்காப்பியச் சூத்திரம். ஈருடல் மூவுடல் சேர்ந்து நின்று இயங்கு தல் உலகத் தில்லாதவாறு போல, மெய் யெழுத்துக்கள் பல ஒருங்கே தொடர்ந்து நின்று ஒலித்தலும் தமிழில் இல்லை. மெய் யெழுத்துக்களைக் கூறநேர்ந்துழியும், அவற்றை உயிர்மெய்கள் ஆக்கிக் 'கசட தபற' 'ஙஞணநமன' 'யரலவழள' என்றே தமிழிலக்கணம் கூறும். இவ்வாற்ருல் தமிழிலக்கணத்துடன்,தத்துவக் கருத்துக் களும் விரவி யமைந்திருத்தல் காணலாம். தமிழிலக்கணத்தின் தனிப்பெருஞ் சிறப்பு,

(6) "Tamil grammarians designate vowels by a **beautiful metaphor,** as Uyir or life of a word; Consonants as Mey, or the body; and the junction of a vowel and consonant as Uyirmey or an animated body."
**—Rt. Rev. Robert Caldwell**

அது தத்துவக் கருத்துக்களுடன் சார்ந் தியைந்து விளங்குதலே யாகும்.

**உடம்படுமெய்:**

தமிழிலக்கணம் தத்துவக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட தென்பது, முன்னரே குறிப்பிடப்பெற்றது. தத்துவ நூல்கள் உடம்புவேறு உயிர்வேறு எனக் கூறுகின்றன. சடப்பொருளாகிய உடம் பின்கண், சித்துப் பொருளாகிய உயிரா னது இடம்பெற்று ஒன்றி நிற்பதனாலேயே, உலகியல் வாழ்க்கை நடைபெறுகின்றது. "அன்போடு இயைந்த வழக்கென்ப ஆரு யிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு" எனவரும் திருக்குறளும், இவ்வுண்மையை யுணர்த்தும். உயிரும் உடலும் தனித் தனியே நிற்பிற் பயனில்லை. அவை இரண்டும் ஒன்று சேர்ந்து இயங்குதல் வேண்டும். உடம்பின்கண் உயிர்வந்து சேர்ந்து ஒன்றி நின்று இயங்குவதே, உலக வாழ்வில் நாம் காணும் இயல்பு. இவ் வாழ்வியல் உண்மையினையே "உடல் மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே" என்னும் நூற்பாவும் உணர்த்துகின்றது. இந்நூற்பாவானது தத்துவச் செய்தியினை யும், தமிழிலக்கண விதியினையும் ஒருங்கே உணர்த்தி நிற்றல் காணலாம். அரன்+ அருள் என்னும் தொடரின் நிலை மொழி ஈற்றிலுள்ள 'ன்' என்னும் உடலின்மேல், 'அருள்' என்னும் வருமொழியின் முதலி லுள்ள 'அ' என்னும் உயிரானது வந்து சேர்ந்து, அவ்விரண்டெழுத்துக்களும் தனித் தனியாக நில்லாமல், அரனருள் எனப் புனர்ந்து னகர உயிர்மெய்யாகிய ஓரெழுத்தாக ஒன்றி விடுகின்றன. மேற் குறித்த நூற்பாவின் பொருள் இதுவே யாகும். இதன்படி உடலும் உயிரும் ஆகிய எழுத்துக்கள் மட்டும் தம்முள் ஒன்றுசேருமேயன்றி, உயிரும் உயிரும் தம்முள் ஒன்றுசேர மாட்டா என்பது பெறப்படும். இது தத்துவம் இலக்கணம் என்னும் இருதிற நூற்கும் பொருந்தும் அரும்பெறல் உண்மையாகும்.

"இருவர் மடந்தையர்க்கு என்பயன்?
இன்புண்டாம்
ஒருவன் ஒருத்தி யுறின்"

எனவரும் திருவருட் பயனும், ஈண்டு ஓராற்றான் எண்ணியுணர்ந்து இன்புறற் பாலது. உயிரும் சிவமும் ஒன்று கூடிய வழியேயன்றி, உயிரும் அருளும் கூடுதல் மாத்திரத்தால் மட்டும், இன்பம் நிகழாது என்பது இதன்பொருள்.

இவ்வாறு உயிரும் உயிரும் தம்முட் சேரமாட்டாமையால், அவற்றுக்குப் பற்றுக் கோடாக ஓர் உடல் இன்றியமையாது வேண்டப் பெறும். இங்ஙனம் இரண்டு உயிர் எழுத்துக்கள் ஒன்று சேர்ந்து உடம் படுதற்குத் துணைபுரியும் மெய்யெழுத்தே 'உடம்படுமெய்' என்னும் குறியீட்டான் வழங்கப்படும். அங்ஙனம் உடம்படு மெய் யாக வரும் எழுத்துக்கள் இரண்டேயாகும். அவை வ்-ய் என்பன வாகும். மணி+ அழகு — மணியழகு எனவும், சே+அடி — சேவடி எனவும், இரண்டு உயிரெழுத் துக்களை ஒன்று சேர்த்தற்கு இவ்வுடம்படு மெய் யெழுத்துக்களைப் பயன்படுத்தும் முறை, தமிழ்மொழியின் முற்போக்கான தூய்மை நெறியின் சிறப்பினை யுணர்த்தி நிற்கின்றதெனப் பேரறிஞர் திரு கால்டு வெல்[7] அவர்கள், புகழ்ந்து கூறுகின்றார். 'உடம்படுமெய்யாக வரும் இவ்வகர யக ரங்களே, மந்திர மொழிகளில் முறையே அருளையும் உயிரையும், குறித்துவருதல், வியப்பிற் குரியதாகத் திகழ்கின்றது' என ஆராய்ச்சியறிஞர் திரு பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள்[8] கூறுவதும், அதனை வலியுறுத்தும் முறையிலேயே,

"வாசி யருளியவை வாழ்விக்கும்;
மற்றதுவே
ஆசில் உருவமாம் அங்கு"

எனத் திருவருட்பயன் என்னும் சித்தாந்த நூல் விளக்குவதும், ஈண்டு நாம் சிந்தித்து உணர்ந்து கொள்ளத்தக்கது.

---

(7) "This use of **v** in one conjunction of vowels, and of **y** in another, is doubtless a result of the progressive refinement of the language."

**—Rt. Rev. Robert Caldwell**

(8) "The same two letters வ and ய occur in Manthras where they are termed as Grace and Soul letters respectively, with the aid of which emancipation or the annihilation of births is attained"

—**The Tamil Alphabet**, Its Mystic Aspect.

**உயர்திணையும் அஃறிணையும்:**

பழந்தமிழ் இலக்கண நூலாசிரியர்கள் உலகத்துப் பொருள்களை யெல்லாம் உயர்திணை அஃறிணை என இருவகைகளாகப் பிரித்தனர். உயிரும் அறிவுமுடைய பொருள்கள் உயர்திணை எனவும், உயிரில்லாத பொருள்களும் உயிரிருந்தும் அறிவில்லாத பொருள்களும் அஃறிணை எனவும் வழங்கப் பெற்றன. எனவே, உயர்திணை அஃறிணை எனும் பழந்தமிழ்ச் சான்றோர்களின் குறியீடானது, அறிவின் சிறப்பை அடிப்படையாகக் கருத்திற் கொண்டு, தத்துவ நூற் பொருட் குறிப்பில் அமைக்கப்பெற்றமை தெளியலாம்.[9]

ஒரு சிலர், வடிவத்தால் மக்களாகக் காணப்படுவராயினும், பண்பால் விலங்கிலும் இழிந்தவராக இருப்பர். ஒருசில உயிர்கள், வடிவத்தால் விலங்கு முதலியனவாக இருப்பினும், தம்முடைய பண்பின் சிறப்பால் மக்களிலும் மேம்பட்டுத் திகழ்வதுண்டு. எனவே, உறுப்பொப்புமை ஒன்றே பற்றியன்றிப் பண்பொப்புமைபற்றியும் கருதியே, ஒரு பொருளை உயர்திணை என்றே அஃறிணை என்றே வழங்குதல் வேண்டும் எனத் தொல்காப்பியர் 'மக்கட் சுட்டு' எனக் கூறிய விதப்பாற் புலப்படுத்தியருளினர்.

இவற்றை யெல்லாம் உள்ளத்திற் கொண்டுதான், 'திராவிடப் பிரகாசிகை' என்னும் சிறந்த உரைநடை நூலை எழுதிய யாழ்ப்பாணம் வடகோவைச் சபாபதி நாவலர் அவர்கள், தாம் இயற்றிய 'சிதம்பர சபாநாத புராணம்' என்னும் நூலின் கண், கற்பக விநாயகர் துதியாகப் பின் வரும் பாடலை அமைத்திருக்கின்றார்.

அறிவில் உயர்ந்தால் அஃறிணைப் பொருள்களும் உயர்திணையாகும். அறிவில் இழிந்தால் உயர்திணைப் பொருள்களும் அஃறிணையாகிவிடும் என நம்மனோர்க்குஇனிது உணர்த்துதற்பொருட்டே, **விநாயகப்பெருமான்** தமது திருவுருவின் மேற்பகுதியில யானை முகமும், கீழ்ப்பகுதியில் மனித வடிவமும் கொண்டு விளங்குகின்றார் என்பது, இப்பாடலின் பொருள்.

> ''ஞானம்மிக வளரின் அஃறிணைய, உயர்
> திணையாகும்: நவில்அஞ் ஞான
> ஈனம்மிக வளரில்உயர் திணைய, அஃ
> றிணையாகும்; என்று தேற்றல்
> மான, அஃறிணைமேலும் மாண்டஉயர்
> திணைகீழும் வடிவில் காட்டித்
> தேன் அமரும் பொழிற்றில்லைச் சிகரியில்வாழ்
> கற்பகத்தை வணக்கம் செய்வாம்''

**வினைச்சொல்:**

ஆசிரியர் தொல்காப்பியர் வினைச்சொல் குறித்து வகுத்துள்ள இலக்கணம் பெரிதும் வியந்து போற்றற்பாலதாயுள்ளது. சொற்களுட் பெயரும் வினையுமே மிகவும் முதன்மை வாய்ந்தவை என்பதனை அனைவரும் அறிவர். பெயர்ச்சொல் அடியாக வினைச் சொற்களும், வினைச்சொல் அடியாகப் பெயர்ச் சொற்களும் தம்முள் ஏற்றபெற்றி தோன்றும். வினைச்சொற்கும் பெயர்ச்சொற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினை,

> ''வினைஎனப் படுவது வேற்றுமை கொள்ளாது
> நினையுங் காலைக் காலமொடு தோன்றும்''

எனத் தொல்காப்பியம் விளக்குகின்றது. முருகனை—முருகனல்—முருகனுக்கு என்றாற் போலப் பெயர்ச்சொற்கள் வேற்றுமை யுருபுகளை ஏற்றுவரும். வினைச் சொற்கள் வேற்றுமை யுருபுகளை ஏற்பதில்லை. வந்தான்-வருகின்றான்- வருவான்- என்றாற் போல வினைச்சொற்கள் காலம் காட்டி வரும். பெயர்ச் சொற்கள் காலம் காட்டும் இயல்புடையன அல்ல. எனவே, வினைச் சொற்கள் வேற்றுமையுருபுகளை ஏலாமல், காலங்காட்டிவரும் இயல்புடையன என்பது, இந் நூற்பாவின் திரண்ட பொருள்.

இனி, இதனைக் கூர்ந்து நோக்கின், வேறொரு சிறந்த தத்துவப் பொருளும் இதன்கண் அமைந்திருத்தல் காணலாம்! நாம் செய்யும் ஒவ்வொரு செயற்கும் அதற்குரிய பயன் ஒருதலையாக உண்டு. நற்

(9) "The classification of nouns in Tamil is decidedly more **Philosophical**; for the difference between rational beings and beings or things which are destitute of reason is more momentous and essential than any difference that exists between the sexes"

—**Dr. Robert Caldwell**

செயல்புரிவோர் அதற்குரிய பயனுகிய நன்மையையும், தீச்செயல் புரிவோர் அதற்குரிய பயனுகிய தீமையையும் அடைந்தே தீருவர். 'வினே' எனுஞ்சொல், செயலேயும்-அதன் பயனேயும்-அப்பயனேத் தரும் தெய்வத்தையும்—முறையே குறிக்கும். அவரவர் செயலுக்கு ஏற்பப் பயன்களே எய்துவிக்கும் 'பால்வரை தெய்வமானது' (தொல்-சொல்-57) வினேப்பயன்களே எய்துவிக்குங்கால், செல்வர் - வறியர்- கற்ருர்-கல்லார் - உயர்ந்தோர்-தாழ்ந்தோர் என்பன போன்ற வேற்றுமைகளேச் சிறிதும் கருதுவதில்லே. வினேப்பயன் வினே செய்தோரை அடைந்தேதீரும். ஆயினும், வினேப்பயன்கள் உடனடியாக விரைந்தோ, ஒரே சமயத்தில் முழுவதும் ஒருங்கு சேர்ந்தோ, வந்துவிடுவதில்லே. அவை தத்தமக்குரிய காலங்களிலேயே முறைப்படி ஊழ்த்தும் உருத்தும் வந்தெய்தும் எனப்பிறிதொரு சிறந்த அரிய தத்துவ நூற்பொருளும், இந் நூற்பாவின்கண் அமைந்து விளங்குதல், தமிழிலக்கணத்தின் தனிப்பெருஞ் சிறப்பியல்பிற்குச் சான்ருகும்!

### ஒருவர் எனும் இயற்சொல்:

'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' எனப் பாரதியார் பாடியதற்கேற்பத் தமிழ் மொழியானது மிகச்சிறந்த சொல்வளம் பெற்றுத் திகழ்கின்றது. அத்தகைய உயர்ந்த சொற்களில் ஒன்ருகக் குறிப்பிட்டுப் போற்றத்தகுந்த சிறப்புடையது 'ஒருவர்' என்னும் செஞ்சொல் ஆகும். அச்சொல் உயர்திணே முப்பால்களுள் ஒரு குறிப்பிட்ட பாலேத் தனியே விளக்காமல், ஒருவன் ஒருத்தி என்னும் இருபாற்கும் பொதுவாக வரும். மேலும் இச் சொல்லானது, ஒரு வகையில் வியக்கத் தக்க அமைப்புடையதாக விளங்குகின்றது எனலாம். இச்சொல் முற்பகுதியால் ஒருமையையும், பிற்பகுதியாற் பன்மையையும் ஒருங்கே இனிதியைத்து உணர்த்துவதாக உள்ளது. இச் சிறப்பியல்பினே விதந்து வியந்தே,

> "ஒருவர் என்பது உயர்இரு பாற்ருய்ப்
> பன்மை வினேகொளும் பாங்கிற் றென்ப"

என நன்னூலார் நவின்றருளினர். சிறந்த இந்நூற்பாவின் திட்பநுட்பம் தெளிந்த சிவஞான சுவாமிகள், இதற்கு நன்னூல் விருத்தியுரையுள் வகுத்துள்ள உரை பெரிதும் சுவை பயப்பதாகும்.

'ஒருவர்' என்னும் இவ்வரிய சொல்லின் அருமை பெருமைகளே, அறிந்துணர்ந்து மகிழக் குமரகுருபர அடிகளார்க்கு ஓர் அரிய வாய்ப்புக் கிடைத்தது. உலகிற் பல மதங்கள் கடவுளே ஆணுவே வைத்துப் போற்றுகின்றன. மற்றும் பல மதங்கள் பெண்ணுகக் கருதி வழிபாடு புரிகின்றன. மனித சமுதாய வாழ்வில் ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள சமவுரிமையினேயும் நிலேயினேயும் உணர்ந்திருந்த பழந்தமிழர்கள், கடவுளேத் தனியே ஆணுகவோ பெண்ணுகவோ கருதாமல், ஆண் பெண் என்னும் இருதிறக்கூறும் அமைந்த அம்மையப்பராகக் கொண்டு, பண்டு தொட்டே வழிபட்டு வருகின்றனர். "நீல மேனிவாலிழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகையுலகும் முகிழ்த்தன முறையே" என ஐங்குறுநூறு என்னும் சங்கநூல் இவ் வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தும். "பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று அவ்வுருத் தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்" எனப் புறநானூறு கூறுதலும் காணலாம். கந்தழிப் பொருளின் இயல்பினே உண்மையாற் கண்டுணர்ந்த சான்ருேர் என நச்சினர்க்கினியர் கூறும் மாணிக்க வாசகர், அம்மையப்பரின் திருவுருவத்தினேயே "தொன்மைக் கோலம்" (கோத்தும்பி 17) எனத்தொழுது போற்றியருளிச் செய்கின்ருர். இத்தகைய அம்மையப்பரின் (அர்த்த நாரீசுவரரின்) திருவுருவச் சிறப்பினே விளக்கும் முறையிலும், 'ஒருவர்' என்னும் சொல்லின் அமைப்பினே வியக்கும் முறையிலும், பின்வரும் பாடலேக் குமரகுருபரர் அருளிச் செய்து நம்மனேரை உவப்பித்து உய்விக்கின்ருர்:

"அருவருப்பான உலகவாழ்வை அறவே துறந்த உயர்ந்த ஞானிகளுக்கு, ஆனந்தப் பெருவாழ்வு தருகின்ற தனது திருநடனத்தின் இயல்பினேக் காட்டுவதற்காக, சூரியன் சந்திரன் ஆன்மா வான் வளி தீ நீர் மண் என்னும் எண்வகைப் பொருளாகவும், வடிவங்கொண்டு விளங்குகின்ற சிவ

பெருமானுக்கும், அவனது தேவியார்க்கும் உருவம் ஒன்ருகவே அமைந்து திகழ் கின்றது. யான் அவ்வுருவத்தினை ஒருவன் என்று குறிப்பிடுவதா, அன்றி ஒருத்தி என்று குறிப்பிடுவதா, என்று அறியாமல் தயங்கித் தடுமாறுகின்றேன். இங்கிலையில் ஆண் பெண் என்னும் இருபாலாரையும் குறிப்பிடத்தக்க வண்ணம், ஒருவர் என்ற இயற்சொல் ஒன்று தமிழில் இருப்பதை நினைவு கூர்ந்து, அதனைப் பயன் படுத்த முற்படுகின்றேன். அந்தச் சொல்மட்டும் தமிழிற் இல்லாமற் போயிருக்குமானல், யான் யாது செய்வேன்?''

"அருவருக்கும் உலகவாழ் வடங்க நீத்தோர்க்
  கானந்தப் பெருவாழ்வாம் ஆடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் இயமானன் தீநீர்
  மண்ணெனும்எண் வகையுறுப்பின் வடிவு
  கொண்ட
ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன்றுல் அவ்
  வுருவையிஃ தொருத்த னென்கோ? ஒருத்தி
  என்கோ?
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்ருேர்
  இயற்சொல்இல தெனின்,யான்மற் றென்
  சொல் கேனே?''

—சிதம்பரச் செய்யுட் கோவை

அம்மையப்பரின் திருவுருவச் சிறப் பினைக் குறித்துக் குமரகுருபரர் பிறிதோர் இடத்தில் அருளிச் செய்துள்ள வேருெரு சிறந்தபாடலும், இயைபுடைமை பற்றி ஈண்டு உணர்ந்து கொள்ளுதற்குரியது. அதுதானும் தமிழ் இலக்கணச் செய்தி நுட்பம் மிக்க தொன்ருக மிளிர்கின்றது!

"சிவந்த வாயையும் கரிய கண்ணையும் கொண்டு, பசுமை நிறம் உடைய மயிலைப் போன்று விளங்கும் அம்மைக்கும், வெண் பிறையைத் தலையிலே சூடியுள்ள சிவபிரா னுக்கும், பெண்பாற்கூறும் ஆண்பாற்கூறு மாய் அமைந்த ஒப்பில்லாத திருவுருவம் ஒன்றே உள்ளது. அத்திருவுருவத்தினை, யாம் எந்தச் சொற்குரிய பொருள் என்று எடுத்துச் சொல்லுவேம்! இனிய அருளைச் செய்கின்ற – புலியூரில் வாழ்கின்ற – நச் சுப் பையையும் புள்ளிகளையும் கொண்ட பாம்பைப் போன்ற - நுண்ணிடை உடைய எந்தாய் என்று, இருவரையுமே ஒவ்வொரு வகையிலே உணர்த்தும்படி, பொதுவாகச் சேர்த்துச் சுட்டக்கூடிய முறையில் யாம் பாடி விடுகின்ருேம். இதனை அம்பிகை யைச் சுட்டுவதாகக் கொள்வோர், எம்+ தாய் (எம்முடைய தாய்) என்றும்; இறை வனைக் குறித்து நிற்பதாகக் கொள்ள விரும்புவோர் எந்தை—எந்தாய்! (எம் முடைய தந்தையே)என்றும் ஏற்றபெற்றி பொருள் கொள்ளக் கடவர்'' என்பது, குமரகுருபரர் அருளிய பின்வரும் பாடலின் திரண்ட பொருளாகும்.

"செவ்வாய்க் கருங்கட்பைந் தோகைக்கும்
  வெண்மதிச் சென்னியற்கும்
ஒவ்வாத் திருவுரு ஒன்றே உளது!
  அவ்வுருவினை மற்று
எவ்வாச் சியம்என்று எடுத்திசைப்பேம்?
  இன்னருட் புலியூர்ப்
பைவாய்ப் பொறியரவு அல்குல்
  எந்தாய் என்று பாடுதுமே!''

—குமரகுருபரர்.

இன்னேரனைய பலசான்றுகளால், தமி ழுக்கும் சைவத்துக்கும் இயல்பாக அமைந் துள்ள பலதிற இயைபுகளையும், நாம் ஒரு வாறு உன்னித்து உணரலாம்.

## தமிழும் சைவமும்:

இதுகாறும் கூறிவந்த வாற்ருலேயே, தமிழுக்கும் சைவத்திற்கும் இடையே யுள்ள பலதிற இயைபுகள், யாவர்க்கும் இனிது புலனுகும். தமிழ்மொழியானது பழமையும் பெருமையும் வாய்ந்த இயற்கை மொழியாதல் போலவே, சைவமும் பழமை யும் பெருமையும் வாய்ந்த இயற்கைச் சமயம் ஆகும். சிந்துவெளிப் பகுதியிற் கிடைத்த சிவலிங்கத் திருவுருவங்கள் மிகப்பலவற்றைக் கண்ட மேலைநாட்டு ஆராய்ச்சியாளர்கள் வியப்படைந்து, உல கிலேயே மிகவும் தொன்மை வாய்ந்த சமயம், சைவ சமயமேயாதல் வேண்டும் என்னும் உண்மையை உணர்ந்து குறிப் பிட்டுள்ளனர்[10].

(10) "Among the many revelations that Mohenjo-daro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to the **Chalco-lithic age** or perhaps even further still and that it thus takes its place as the **most ancient living faith** in the world."

**—Sir John Marshall,**
*Mohenjo-daro and the Indus Civilization*

சிவலிங்கத் திருவுருவங்களும் சிவலிங்க வழிபாடும், இந்திய நாட்டில் மட்டுமேயன்றி எகிப்து-சிரியா-பாரசீகம் - துருக்கி - கிரீசு -இத்தாலி - ஆப்பிரிக்கா - அமெரிக்கா – ஆஸ்திரேலியா - திபெத்து - சீனு - ஜப்பான் - சுமத்திரா - ஜாவா - போர்னியோ - சிலோன் முதலிய உலகின் பல நாடுகளிலும் ஒரு காலத்திற் பெரிதும் பரவியிருந்தது. இதனை எச். எம். வெஸ்ட்ராப், இ. பி. டெய்லர், ஆலன் கிராண்ட் முதலிய மேற்புல அறிஞர்கள் தத்தம் நூல்களில் ஆராய்ந்து குறிப்பிட்டுள்ளனர்[11].

சைவசமயத்தின் தோத்திர சாத்திர நூல்கள் - உயர்ந்த கொள்கைகள் ஒழுகலாறுகள் – எழில்மிக்க இனிய கோயில்கள் - அவற்றைச் சார்ந்து வளர்ந்தோங்கி வரும் பலவகைத் தெய்விகக் கலைகள் - இவற்றையெல்லாம் இனிது பரப்பிப் போற்றிப் புரந்த எண்ணிறந்த பற்பல அருளாளர்களின்வரலாறுகள்-நடராசர் தட்சிணாமூர்த்தி முருகன் முதலிய மூர்த்திகளின் தத்துவ நுட்பங்கள் - ஆகியன பலவற்றையும் ஊன்றி அறியும்தோறும், சைவசமயத்தின் தனிப் பெருஞ் சிறப்பினை யாவரும் இனிதுணரலாம்.

தமிழும் சைவமும் தம்முள் ஒன்றோடொன்று பிரிவற விரவிக் கலந்துள்ளன. தமிழ் இன்றிச் சைவம் இல்லை; சைவம் இன்றித் தமிழ் இல்லை. சைவர்கள் தமிழையும் தமிழர்கள் சைவத்தினையும் தக்காங்கு போற்றக் கடமைப்பட்டுள்ளனர். தமிழின் நீர்மை பேசப்பெறும் இடங்களிலெல்லாம், சிவபெருமான் எழுந்தருளி விளங்குவதாக ஞானசம்பந்தப் பெருமான் பாடுகின்றார்.

(11) "The practice of Linga-worship was so general as to have spread itself over a large part of the habitable globe, for it flourished for many ages in Egypt, Syria, Persia, Asia Minor, Greece and Italy. It still is in vigour in India and many parts of Africa and was even found in America on its discovery by the Spaniards being regarded as the most sacred object of worship and consecrated by religion. The culture was associated with the very idea and sentiment which was regarded as ennobling to man."

—**H. M. Westropp.**

தமிழின் நீர்மை பேசித் தாளம்
வீணை பண்ணி நல்ல
முழவம் மொந்தை மல்கு பாடல்
செய்கை இடம் ஓவார் ;
குமிழின் மேனி தந்து கோல
நீர்மையது கொண்டார்
கமழும் சோலைக் கானூர் மேய
பவள வண்ணரே

—தேவாரம்.

சைவ சமயக் கடவுளர், தமிழ்மொழியின்பால் தணியாக் காதல் மிகக்கொண்டு விளங்குதலை, சுவைகெழுமப் பலவகைகளில் சைவத்தமிழ்ப் பெருஞ்சான்றோர்கள் பலரும் பாடியிருத்தல், தமிழும் சைவமும் எத்தகைய நெருங்கிய தொடர்புடையன என்பதனை இனிது புலப்படுத்தும். திருக்கயிலையில் உள்ள சிவபெருமான், தெற்கே தில்லையிலும் மதுரையிலும் எழுந்தருளித் தென்றிசை நோக்கித் திருநடனம் புரிவது, தமிழகத்திற்கே யுரிய இனிய தென்றலின் மென்மையை நுகரவும், தமிழின் அமிழ்தத்தினைச் செவிகளிற் பருகவுமேயாகும் என்கின்றார் பரஞ்சோதி முனிவர்! தமிழ்மொழியின் எல்லையற்ற இன்பத்தினைக் குடும்பமாகக் கூடியிருந்து உண்டு களித்து மகிழ்தற்கே, சிவபிரானும் அம்பிகையும் முருகனும் முறையே, மதுரையிற் சவுந்தர பாண்டியன்—தடாதகைப் பிராட்டி-உக்கிரப் பெருவழுதி எனத் தோன்றியருளித், தமிழ் வளரும் பாண்டிய நாட்டை ஆண்டு மகிழ்ந்தின்புற்றனர் எனப் பாடுகின்றார் குமரகுருபர சுவாமிகள்.

"தமரநீர்ப் புவனம் முழுதொருங் கீன்றாள்
தடாதகா தேவிஎன் றொருபேர்
தரிக்கவந் ததுவும் ; தனிமுதல் ஒருநீ
சவுந்தர மாறன் ஆனதுவும் ;
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
கொண்டதும் ; தண்டமிழ் மதுரம்
கூட்டுண எழுந்த வேட்கையால் எனில் இக்
கொழிதமிழ்ப் பெருமை யார் அறிவார் ?"

—மதுரைக் கலம்பகம்.

தமிழ் மொழியின்கண் உள்ள ஓகாரம் (ஓம்) ஆகிய எழுத்தின்வடிவ அமைப்பை ஒட்டியே, விநாயகப் பெருமானின் திருமுக மண்டலம் (யானை வடிவில்) அமைந்திருத்தல் காணலாம். தமிழிலுள்ள உயிர் எழுத்துக்களைப்போலப் பதினெட்டுக் கண்

களும், வல்லினம் மெல்லினம் இடையினம் ஆகிய இன எழுத்துக்களைப் போல ஆறு திருமுகங்களும், ஒப்பற்ற நுண்ணிய ஒலியாகிய ஆய்த எழுத்தைப் போலத் திண்ணிய சிறந்த வேற்படையையும் கொண்டு விளங்குதலால், முருகனே தமிழ்; தமிழே முருகன் எனப் பாடுகின்றார் தண்டபாணிச் சுவாமிகள்.

கண்நிகர் மெய்யும், சென்னிக்
கணம்உறழ் இனத்தின் கூறும்,
திண்ணிய புயங்க ளேபோல்
திகழ்தரும் உயிரும், வேறென்று
எண்ணிடற் கரிய தாகும்
எஃகமும், இயலிற் காட்டும்
புண்ணிய முருகன் செய்ய
பொற்பதம் போற்றி வாழ்வாம்.

—புலவர் புராணம்.

முடிவுரை :

'தமிழும் சைவமும்' பழமையும் பெருமையும் வாய்ந்தவை; உலகளாவிய உயர்ந்த பெருஞ் சிறப்புக்கு உரியவை; நமது முன்னோர்களால் உயிரினும் விழுமியவாக வளர்க்கப் பெற்றவை; அயல்நாட்டு அறிஞர்கள் பலரும்கூட மிகவியந்து போற்றிப் புகழும் மாட்சிமை வாய்ந்தவை; உயர்வற உயர்ந்த பல நலங்களை யுடையவை; மொழியால் தமிழரும் சமயத்தால் சைவரும் ஆகிய நாம் அனைவரும், தமிழும்சைவமும் ஆகிய இவ்விரண்டையும் நமது பேச்சும் மூச்சுமாகக் கொண்டு, கண்ணிற் கருமணிபோல் மதித்துப் போற்றி வளர்த்து, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து உய்ய முற்படுவோமாக!

"தொண்டர் நாதனைத் தூதிடை
விடுத்ததும்; முதலை
உண்ட பாலனை அழைத்ததும்;
எலும்புபெண் உருவாக்
கண்டதும்; மறைக் கதவினைத்
திறந்ததும்; கன்னித்
தண்டமிழ்ச் சொலோ? மறுபுலச்
சொற்களோ? சாற்றீர்"

—பரஞ்சோதி முனிவர்.

[இலங்கை யாழ்ப்பாணம் காரைநகர்ச் சைவமகாசபையின், ஐம்பதாம் ஆண்டுப் பொன்விழாப் பேரவையில், யாழ்ப்பாணம் பரமேசுவரா கல்லூரி முதல்வர் திரு. மு. ஞானப்பிரகாசம் B. A., B. Sc. அவர்கள் தலைமையில், 3—6—68 திங்கள் அன்று, ஆற்றிய சொற்பொழிவினைத் தழுவியது]

—ஆசிரியர்.

---

## செம்மைத் தமிழின் சிறப்பு

மொழிகள் பலப்பலதாம் மூதுலகில் உண்டு!
இழிவின் றவையுயர்ந்த வேனும்,—விழுமியநம்
செந்தமிழ்போல் தெய்வத் திறம்சிறந்த சீர்த்தி, மற்றை
எந்தமொழிக் கேனும்உண்டோ? ஈண்டு. (1)

சட்டத்தில் லத்தீனம்; சால்பறத்தில் ஈபுருவம்;
தட்பமிகு தத்துவத்தில் சம்ஸ்கிருதம்;—நுட்பமிக
ஆன்ற அறிவியலில் ஆங்கிலம்சேர் மன்ஃபிரெஞ்ச்போல்,
சான்றஇறை மாண்பில் தமிழ்! (2)

நம்மருமைச் செந்தமிழின் நல்லமைப்பை ஆராய்ந்தால்
செம்மைமிகு நற்றமிழர் தெய்வநல—மெய்ம்மைகள்தாம்
எல்லாம் பொதிந்தொளிர்தல், யாரும் இனிதுணர்ந்து
நல்லோராய் வாழ்வர்! நயந்து. (3)

செகப்பிரியர் பேசிய சீர்மொழி என்று
மிகப்பெரிதும் கொள்கின்றார் வீறு!—தகச்சிறிதோ
நம்மருமை ஆழ்வார்கள் நாயன்மார் தாம்பாடும்
செம்மைத் தமிழின் சிறப்பு! (4)

—ஆசிரியர்.

# கொங்கு நாட்டுத் தலங்கள்

### 5. திருவெஞ்சமாக்கூடல்

**இருப்பிடம்:** இது திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் கருவூர்ப் பகுதியில் இருக்கின்றது. கருவூரில் இருந்து தென்மேற்கில் அரவக் குறிச்சிச் சாலையில் 8 கல் தொலைவு சென்று கிளைச் சாலையில் பிரிந்து ஐந்து கல்நடந்தோ, வண்டிகளில் சென்றோ, ஆற்றைக் கடந்து இத்தலத்தை அடைய லாம். தங்குவதற்குத் தேவத்தானத்துக் கட்டிடம் ஒன்றிருக்கின்றது.

**தலவரலாறு:** வெஞ்சன் என்னும் வேட அரசன் இங்கிருந்து அரசாண்டு, இறைவனை வழிபட்டுப் பேறுபெற்றான். அவனுடைய தலைநகரமாக இது விளங்கியிருந்தது. கோயிலுக்குப் பின்புறம் தெற்கிலிருந்து ஓடிவரும் குடவனாறு (குழகன் ஆறு) நாலுகல் தொலைவில அமராவதி நதியுடன் கலக்கின்றது. கோயிலுக்குத் தெற்கே கொஞ்சதூரத்தில் சிற்றாறு என்னும் காட்டாறு இதனுடன் வந்துகூடுகின்றது. இவ்விரண்டு ஆறுகள் கூடும் இடத்தில் இருப்பதால் 'கூடல்' என்னும் பெயருடைய இத்தலம், வெஞ்சன் என்னும் அரசனின் பெயருடன் சேர்த்து வெஞ்சமாக்கூடல் எனப்படுவதாயிற்று. இஃது இப்போது வெஞ்சமாங் கூடலூர் என மருவி வழங்குகின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருப்பதிகம் ஒன்றும், அருணகிரி நாதர் திருப்புகழ் ஒன்றும், திருச்செங்கோடு வித்துவான் திரு. தி. அ. முத்துச்சாமிக்கோனார் இயற்றிய தலபுராணமும் பிறவும் இதற்குண்டு. கோயில் மதிலுக்கு வெளியில் வடமேற்கில் ஆற்றோரம் வெஞ்சன் என்னும் மன்னனின் சிலை, மார்புவரை மண்ணில் புதைந்திருக்கின்றது. ஆண்டுக்கு ஒருமுறை மக்கள் இங்கு வழிபாடு செய்கின்றனர். கோயிலுக்கு வடக்கே சற்றுத் தொலைவில் பொன் பரப்பி அம்மன் கோயில் இருக்கின்றது. சிவபெருமான் இங்குச் சுந்தரருக்காக ஒரு திருவிளையாடலை நிகழ்த்தினார். தாம் ஒரு கிழவேடம்பூண்டு, சிவகுமாரர்களை இரு சிறுவர்களாக்கி, உமையம்மையை ஒரு முதியவள் ஆகுமாறு செய்து, இரு குமாரர்களையும் கிழவியிடம் ஈடுவைத்துப் பொன் வாங்கிச்சுந்தரரின் பாடலுக்குப் பரிசு வழங்கினார். இச் செய்தியை,

> "கிழவேதிய வடிவமாகி விருத்தையைக்
> கிட்டிஎன்றன்
> அழகாகும் மக்கள் அடகுகொண்டு அம்பொன்
> அருளுதிஎன்று
> எழுகாத லால்தமிழ் பாடிய சுந்தரற்கு
> ஈந்தஒரு
> மழுவேந்தியவிகிர் தேசுரன் வாழ்கொங்கு
> மண்டலமே"

எனக் 'கொங்கு மண்டல சதகம்' குறிப்பிட்டுப் புகழ்ந்து கூறுகின்றது.

**கோயில் அமைப்பு:** திருக்கோயில் பள்ளத்தில் கிழக்குநோக்கி யிருக்கின்றது. எதிரில் உள்ள ஊர் மேட்டில் இருக்கின்றது. அங்கிருந்து சில படிக்கட்டுக்கள் இறங்கினால்தான் கோயிலை அடைய லாம். கோபுரம் இல்லை. மிகப் பழைய கோயில். இரண்டு பிராகாரங்கள் உள்ளன. இவ்வூர் ஒரு கோட்டையாக இருந்து அழிந்து போனதற்குரிய அடையாளங்கள் காணப்படுகின்றன. இத்தலம் சிற்றாற்றின்

கீழ்க்கரைமேல் அமைந்திருத்தலைச் சுந்தரர் "சிற்றுறதன் கீழ்க்கரைமேல்" எனத் தம் பதிகப் பாடல்களிற் குறிப்பிடுகின்றார். ஆற்றின் வளத்தையும், ஊரின் செழிப்பையும், மகளிர் திரள் திரளாக வந்து வழி படுதலையும், இங்கு நடைபெற்ற பல விழாக்களின் சிறப்பையும், சுந்தரரின் தேவாரம் பெரிதும் புகழ்ந்து போற்றியுள்ளது. இத்தகைய ஒரு பேரூர், இப்போது மிகவும் சிற்றூராகிவிட்டமை பெரிதும் இரங்கத் தக்கதாகும். கோயிலும் மிகப் பழுதுபட்டுச் சிதைந்து இருக்கின்றது.

**கல்வெட்டுக்கள் :** இக்கோயிலிற் பல கல்வெட்டுக்கள் உள்ளன. அவை சுவாமி, அம்பாள் கருவறைச் சுவர்களிலும், முன் மண்டபச் சுவர்கள் தூண்களிலும், திருமாளிகைப் பத்தியின் தென்வட சுவர்களிலும் காணப்படுகின்றன. அவைகளில் 'இராஜகேசரி' 'ஜயகேசரி' என்ற சொற்கள் தனியே பொறிக்கப் பெற்றுள்ளன. இவை கோனேரின்மை கொண்டான், ஜடாவர்மன் சுந்தரபாண்டிய தேவன், பாண்டியன் மாறவர்மன், குலசேகரதேவன், வீரராஜேந்திரன், வீரபாண்டியன் என்னும் மன்னர்கள் காலத்தில் ஏற்பட்டவை. பல ஊர்களை இக்கோயிலுக்கு இறையிலித் தேவதானமாக விட்டதும், கோயிலிற் பூசை முதலியன நிகழ்தற்காகப் பல மானியங்கள் அளித்ததும், விளக்கெரிக்கப் பொன் வழங்கியதும், சுந்தரபாண்டிய தேவன் பண்ணேர் மொழியம்மை கோயிலில் சில திருப்பணிகள் செய்ததும் ஆகிய செய்திகள் பல, இக்கல்வெட்டுக்களாற் புலனுகின்றன.

**இறைவன் பெயர்:** விகிர்தேசுவரர். "வெஞ்சமாக்கூடல் விகிர்தா" எனச் சுந்தரர் ஒவ்வொரு பாடலிலும் குறிப்பிடுதல் காணலாம். இறைவி பெயர் : விகிர்தேசுவரி, மதுர சுபாஷிணி. தேவாரத்திலும், இக்கோயிற் கல்வெட்டுக்களிலும் பண்ணேர் மொழியம்மை என்று குறிக்கப் பட்டிருக்கின்றது.

**விழா :** இக்கோயிலில் இரண்டு கால பூசை நடைபெறுகின்றது. மாசி மாதத்திற் பத்து நாட்கள் விழா நன்கினிது நடத்தப் படுகின்றது.

## (6) திருப்பாண்டிக் கொடுமுடி

**இருப்பிடம் :** கோயம்புத்தூர் மாவட்டத்தில், ஈரோட்டுக்கு 23 கல். கொடுமுடி என்னும் இருப்புப்பாதை நிலையத்தில் இருந்து அரைக்கல் தொலைவில் இருக்கின்றது. கறையூர், கொடுமுடி, திருப்பாண்டிக் கொடுமுடி என்ற பெயர்களை யுடையது. இது காவிரியின் மேற்கரையில் இருக்கின்றது. கொங்கு நாட்டுச் சிவ தலங்கள் ஏழில், மூவராலும் பாடப் பெற்றது கொடுமுடி ஒன்றே.

**தல வரலாறு :** ஆதிசேடனுக்கும் வாயுவுக்கும் ஏற்பட்ட ஒரு போட்டியில், மேரு மலையின் ஒரு சிகரம் பறிக்கப்பட்டு வீழ்ந்தபோது, அதனினின்றும் ஐந்து மணிகள் சிதறி வீழ்ந்து ஐந்து தலங்கள் ஆயின. அவற்றுட் சிவப்புமணி திருவண்ணுமலையும், மரகதம் திருஈங்கோய் மலையும், மாணிக்கம் திருவாட்போக்கி (இரத்தின கிரி)யும், நீலம் திருப் பொதிகை மலையும், வைரமணி திருக் கொடுமுடியும் ஆயின என்பது தல புராணம். கொடுமுடி என்பது பெரிய சிகரம் எனப் பொருள் தரும். மலைச் சிகரமே மகுடேசுவரர் ஆக எழுந்தருளியுள்ளார். அகத்தியர் கமண்டலத்திற் கொணர்ந்த காவிரியை இந்திரன் சீர்காழியில் வைத்த நந்தவனம் செழிக்கும் பொருட்டு, விநாயகக் கடவுள் காக்கையுரு எடுத்துக் கவிழ்த்த இடம் இதுவே. அந்நதி இத்தலத்தின் அருகில் உள்ளதெனக் கூறுவர். இவ்விடம் வரையில் தெற்கு நோக்கி வரும் காவிரி, இங்கிருந்து கிழக்கு நோக்கித் திரும்பி ஓடுவதும் காணத் தக்கது. இங்கே காவிரியாற்றின் இடையில் 'அகத்தியர் பாறை' என வழங்கும் பாறையில், இந் நிகழ்ச்சியைக் குறிக்கும் திருவுருவங்கள் காணத்தக்கன. 'காவிரி கண்ட விநாயகர்' என்ற பெயருடன் இம் மூர்த்தி கோயில் கொண்டுள்ளார். இத் திருக்கோயிலில் வன்னி மரத்தின்கீழ்ப் பிரமதேவர் ஆலயமும், மகுடேசுரர்க்கு நிருதி திசையில் அரங்கநாதராகிய விஷ்ணு மூர்த்தியாலயமும் உண்டு. இவ்விருவரும்

மகுடேசுவரரைத் தரிசிக்க வந்து அமர்ந் தனர். இதனை யுணராதார், அது திரி மூர்த்தித் தலம் எனக் கூறி அபசாரப் படுவர். கன்மாடன் என்னும் வேதியனுக்கு வயிற்றில் இருந்த கறையைப் போக்கி உய்வித்ததனுல் கறையூர் எனவும், அங்க வருத்தகன் என்னும் பாண்டிய அரச குமாரனின் அங்கக் குறையைத் தீர்த்த காரணத்தால் பாண்டி எனவும், இத்தலம் பெயர் பெற்றது என்பது தலபுராணம். இங்கு மலையம்மன் கோயில் என்ற கிராம தேவதையின் சந்நிதியும் சிறப்புடையது.

**கோயில் அமைப்பு :** காவிரிக் கரையில் கிழக்கு நோக்கி யிருக்கின்றது. மூன்று கோபுரங்கள் கிழக்கில் உள்ளன. இவை கள், இறைவன்—திருமால்—அம்மையின் சந்நிதிகளுக்கு நேரே இருக்கின்றன. கோயிலின் வடபாகத்திற் சுவாமி சந்நிதி யும், தென் பாகத்தில் அம்மை சந்நிதியும் கிழக்கு நோக்கி இருக்கின்றன. இவற் றிற்கு நடுவில் பின்புறம் பெருமாள் சந்நிதி யுள்ளது. வடமேற்கு மூலையில் ஆஞ்ச நேயர் கோயிலும், பெருமாள் கோயிலுக் குத் தென் புறம் மகாலட்சுமி சந்நிதியும் காணலாம்.

**தீர்த்தங்கள் :** இத்தலத்துக்குரிய தீர்த் தங்கள் நான்கு. காவிரியாறு கோயிலுக்கு எதிரில் ஓடுகின்றது. தேவதீர்த்தம் வன்னி மரத்திற்குப் பக்கத்திலும், பிரமதீர்த்தம் அம்மன் கோயிலுக்குப் பக்கத்திலும், பரத் துவாச தீர்த்தம் சுவாமி சந்நிதியின் முன் பும் உள்ளது. தலவிருட்சம் : வன்னிமரம்.

**கல் வெட்டுக்கள் :** இங்குச் சுந்தரபாண் டியன் கோனேரின்மை கொண்டான், கொங்கு மன்னனுன வீரநாராயண இரவி வர்மன் முதலியவர்கள் காலத்துக் கல் வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவற் றினுல், அதிராஜராஜ மண்டலத்துக்காவிரி நாட்டுக் கறையூர்த் திருப்பாண்டிக் கொடு முடி என்றும்; இறைவன் பெயர்கள் திருப் பாண்டிக் கொடிமுடி மகாதேவர், ஆளு டைய நாயனுர் என்றும்; கோயிலில் பள்ளி கொண்ட பெருமாள் (அரங்கநாதர்),பெரிய திருவடி (கருடன்), இளைய பிள்ளையார் (முருகன்) எழுந்தருளியிருந்தனர் என்றும்; கோயிற் பூசனை திருவிழா திருப்பணிகள் முதலியவற்றிற்குத் தேவதானமாக நிலங் கள் பல வழங்கப்பட்டன என்றும், அறியப் படுகின்றது.

**இறைவன் பெயர் :** இத்தலத்துப் பெரு மானின திருநாமங்கள் கொடுமுடி நாதர், மகுடேசர்,மலைக் கொழுந்துநாதர் என்பன. இறைவன் சுயம்புமூர்த்தி. தேவியின் திருப் பெயர்கள் வடிவுடைநாயகி, பண்மொழி யம்மை என்பன. திருமால் வீரநாராயணப் பெருமாள். பள்ளிகொண்ட திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம்.

**விழாக்கள் :** ஆவணியிலும், பங்குனி யிலும் நான்கைந்து நாட்கள் சூரியனின் கதிர்கள், சுவாமி-அம்பாள் ஆகிய இரண்டு திருவுருவங்களிலும் படுகின்றன. இங்குச் சித்திரைத் தேர், ஆடிப் பதினெட்டாம் பெருக்கு, மார்கழித் திருவாதிரை, வைகுண்ட ஏகாதசி ஆகிய திருவிழாக்கள் சிறப்புற நடைபெறுகின்றன. அப்பர், சம் பந்தர், சுந்தரர் மூவரும் இதனைப் பாடி யுள்ளனர். "திருக்கொடும்முடி என்றலும் தீவினை கருக்கெடும் இது கைகண்ட யோகமே" என அப்பர் இதனைப் பாடி யுள்ளார். சுந்தரர் இங்கு நமச்சிவாயப் பதிகம் பாடியருளிய சிறப்பு குறிக்கத் தக்கது.

## (7) திருக்கருவூர் ஆனிலை

**இருப்பிடம் :** இது திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் ஒரு பகுதியின் தலைமை யிடம். கரூர் என்னும் இருப்புப் பாதை நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவில் கோயில் இருக்கிறது. ஊருக்குக் கருவூர் என்றும், கோயிலுக்கு ஆனிலை என்றும் பெயர். "தொண்டர்தம் சிந்தைநீங்கா அங்கிலை அரனுர் வாழ்வது ஆனிலை என் னும் கோயில்" என்பது சேக்கிழார் வாக்கு.

**தல வரலாறு :** இத்தலத்திற்கு வஞ்சி, ஆதிமாபுரம், ஆதிபுரி, வஞ்சுளாரணியம், வஞ்சிவனம், கருப்பபுரி, கரபுரி, கோபிதார வனம், பசுபதீச்சரம், பாஸ்கரபுரம், சண்மங் கலபுரம் எனப் பல பெயர்கள் வழங்கும்.

காமதேனுவாகிய ஆன் (பசு) வழிபட்டதால் ஆனிலை என்றும், கற்பந்தோறும் பிரமன் தவஞ்செய்து படைப்புத் தொழிலாற்றல் பெற்றபடியால் கருப்பபுரி என்றும், அவன் கருவுற்பத்தி செய்த இடமாதலால் கருவூர் என்றும்,திருமால் இங்குப் பள்ளிகொண்டிருத்தலால் பாஸ்கரபுரம் என்றும், வஞ்சி மரங்கள் நிறைந்துள்ளதால் வஞ்சிவனம் என்றும், மலை காடு ஆறுதீர்த்தம் நகரம் கோயில் என்ற ஆறு மங்கலப் பொருள்கள் உள்ளமையால் சண்மங்கலபுரம் என்றும் பெயர்கள் அமைந்தன. இவ்வூர்க் கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் முடிவழங்கு சோழபுரம் என்று இவ்வூர் குறிக்கப்பட்டுள்ளது. சோழ மன்னர்களின் தலைநகராகவும், சோழர்கள் முடிசூட்டிக் கொள்ளும் ஐந்து ஊர்களான காவிரிப்பூம் பட்டினம் கருவூர் திருவாரூர் உறையூர்சேய்ஞலூர் என்பவற்றுள் ஒன்றாகவும் இந் நகரம் விளங்கியது. சேரநாட்டின் தலைநகரான வஞ்சியென்பது இக்கருவூர்தான் என்பது ஒரு சில ஆராய்ச்சியாளர்களின் கருத்து. திருப்பரங்குன்றத்தில் முருகப் பெருமானுக்குத் தெய்வயானை அம்மையாரைத் திருமணம் செய்துகொடுத்த போது, தேவேந்திரன் கருவூரில் அரசாண்ட சோழ மன்னனனமுசுகுந்தச்சக்கரவர்த்திக்கு அழைப்புக் கொடுத்தாகக் கந்த புராணம் கூறுகிறது.

இத்தலத்தில் சுக்கிரன், முசுகுந்தன், கோபிதாரன், விபண்டகன் என்பவர்கள் இறைவனை வழிபட்டுப் பேறு பெற்றனர். மேலும் எறிபத்தநாயனர், புகழ்ச் சோழ நாயனர், சிவகாமி ஆண்டார், கருவூர்த் தேவர் முதலிய சிவனடியார்கள் பசுபதீச்சுரரை வழிபட்டு முத்தியடைந்தனர். சுக்கிரன் இத்தலத்தில் தவஞ்செய்து மிருத சஞ்சீவினி மந்திரத்தை உபதேசிக்கப்பெற்றான் என்பர்.

**கோயில் அமைப்பு:** திரு ஆனிலைக் கோயில், ஊருக்கு மேற்கில் அமைந்துள்ளது. கோயில் வாயிலைப் பெரிய கோபுரம் அழகு செய்கிறது. இறைவன் சந்நிதி கிழக்கு நோக்கியும், இரண்டு அம்மன் சந்நிதிகள் கிழக்கும் தெற்கும் நோக்கியும் விளங்குகின்றன. தெற்கு வெளிப்பிராகாரத்தில் கருவூர்த்தேவர் கோவில் இருக்கிறது. ஒன்பதாம் திருமுறையிலுள்ள திருவிசைப்பாவில் பத்துப் பதிகங்கள் அருளியவர் இவரே. வடக்கு வெளிப் பிராகாரத்தில் அழகிய நூற்றுக் கால் மண்டபம் இருக்கிறது. இலிங்க மூர்த்தி சிறிது வடபுறம் சாய்ந்திருக்கிறார். முடியில் பசுவின் கொம்புபட்ட வடு இருக்கின்றது. இக்கோயிலில் இலிங்கமூர்த்தியின்மேல், பங்குனி 27, 28, 29-ஆம் நாட்களில் சூரியனுடைய கதிர்கள்படுகின்றன. ஐப்பசி மாதத்திலும் இங்ஙனம் அதே தேதிகளில் நிகழ்கின்றது. ஆயினும் மக்கள் பங்குனி மாதத்தில்தான் இதனைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

**பஞ்சலிங்கங்கள்:** இத்தலத்தில்சிறப்பாகச் சொல்லப்படுகின்றன. அவை ஆதிநாயகராகிய பசுபதிலிங்கம்,அதன் கீழ்ப்பாலுள்ள கோடீச்சுரலிங்கம், அதற்கும் கீழ்ப்பாலுள்ள கயிலாயநாதலிங்கம், அதன் தெற்கேயமைந்த கரியமால் ஈசலிங்கம், அதற்கும் அக்கினிதிக்கில்ஆம்பிரநதிநதிக் கரையில் இருக்கும் வஞ்சுளேச்சுரலிங்கம் என ஐந்துமாம். இத்தலத்தின் விருட்சம் வஞ்சி (அசோகம்).

**தீர்த்தங்கள்:** இத்தலத்தின் தீர்த்தங்களிற் சிறந்தன ஆறு. அவைகள் ஆம்பிர நதி, தேனு தீர்த்தம் (வெள்ளை மலையில் உள்ளது),முருக தீர்த்தம்(ஆம்பிரநதிக்குக் கிழக்கே கோபிதாரவனத்தில் இருப்பது), அரசதீர்த்தம் (பதரி வனத்திற்கு மேற்கே ஆம்பிரநதிக் கரையில் உள்ளது),தாடகை தீர்த்தம் (ஆதிநாயகர் ஆலயத்தில் உள்ளது), பிரமதீர்த்தம் (வஞ்சுளேச்சுரத்துக்குக் கிழக்கேயுள்ளது) என்பவையாம். காமதேனு உண்டாக்கிய வெண்ணைமலை இத்தலத்திற்கு மேற்கே மூன்று கல் தொலைவில் இருக்கிறது. இது முருகப் பெருமானுக்குகந்தசிறந்த குன்றுதோருடல்களுள் ஒன்று. இதன் பெயருக்கு ஏற்றபடி, இம்மலை வெண்மையாயும்,கடும்வெயிலிலே கூடக் குளிர்ந்தும் இருக்கும்.

**கல்வெட்டுக்கள் :** கருவூர் திரு ஆனிலைக் கோயிலில் 17 கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவை வீரராசேந்திர சோழன், மூன்றும் குலோத்துங்கன், இராசேந்திர சோழன், விக்கிரமசோழன், இராச இராச தேவன், சுந்தரபாண்டியன், மீனாட்சி நாயக்கன் முதலிய மன்னர்களின் காலத்தவை. இவைகள் பாக்கூர், கணபதி நல்லூர், வீரசோழ நல்லூர், நெல்வேப் பள்ளி, ஆதிச்சமங்கலம் முதலிய கிராமங்களைக் கோயிலுக்குவழங்கிய செய்தியைக் கூறுகின்றன. ஒரு கல்வெட்டில் கருவூர், வெங்கல நாட்டின் வீரசோழ மண்டலத்தின் ஒரு பகுதியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கி.பி. 1066வீரராசேந்திரன்பாக்கூர் என்ற கிராமத்தைக் கோயிலுக்கு வழங்கிய செய்தியைக் கூறும் கல்வெட்டின் கடைசியில் "இத்தர்மம் காப்பான் பாதம் என் தலைமேலே" என்று மிகப் பணிவுடனும் பக்தியுடனும் குறித்திருப்பது நோக்கத்தக்கது. (தொடரும்)

—ஆசிரியர்

---

## மதிப்புரை

**ஸ்ரீஸ்துதி :** ஸ்ரீமங் நிகமாந்த மகாதேசிகர் என்னும்வேதாந்த தேசிகர், திருமகளின் சிறப்புக்களையெல்லாம் ஒருங்கே தொகுத்து, வடமொழியிற் பாடியருளிய சிறந்த தோத்திர நூல் இது. வறுமையுற்று வாடிய பிரமசாரி ஒருவனின் வேண்டுகோட்கு இணங்கி, அவன்பாற் பெரிதும் இரக்கம் கொண்டு, அவனது வறுமை தீரும்படி, ஸ்ரீ தேசிகர் இதனைப்பாடியருளினர் என்பது வரலாறு. திருமகளின் திருவருளுக்குப் பாத்திரராய்ச் செல்வச் செழிப்புற்று வாழ விரும்புபவர் அனைவரும், பக்தி சிரத்தையுடன் பாராயணம் செய்து பயன்பெறுதற்குரிய சிறப்புடையது இந்நூல்:

இந்நூலை மூலத்துடனும், பதவுரையுடனும், அவதாரிகைமுதலிய விளக்கவுரைகளுடனும், ஆழ்வார் திருநகரி ஸ்ரீ உ. வே. திருமலைநல்லான் சக்கரவர்த்தி இராம கிருஷ்ணையங்கார் அவர்கள், சிறந்த முறையில் எழுதிப் பதிப்பித்திருக்கின்றார்கள்.

"அர்த்த தாரா" என்னும் பெயரில் எழுதப் பெற்றுள்ள இவ்வுரைநூல், படிப்பவர்களுக்குத் தெளிவும் சுவையும் பயப்பதுடன், பிராட்டியின்பால் மிக்க பக்தியும் விளைக்கவல்லது. இந்நூலின் வடமொழிச் சுலோகங்களை, மிகவும் இனிய முறையில், தமிழில் செய்யுட்களாக மொழி பெயர்த்தும், இந்நூலாசிரியர் உதவியிருக்கின்றார்.

திரு உ. வே. எஸ். சம்பத் குமாராசார் சுவாமிகள், பக்தர்கள்பலருக்கும் பயன்படும் படி இந்நூலை அச்சிற் பதிப்பித்து வெளியிட்டு உதவியிருத்தல், பெரிதும் போற்றி மகிழத்தக்க பெருந்தொண்டாகும். சிறந்த நல்ல திருத்தமான பதிப்பு. பக்கங்கள் 150. விலை ரூபா இரண்டு. கிடைக்குமிடம். ஸ்ரீ இராமகிருஷ்ண ஐயங்கார், 29. பெருமாள் முதலிதெரு, சௌகார்பேட்டை, சென்னை-1.

—ஆசிரியர்.

# 'விநாயகர் சிறப்பு'

**முன்னுரை :**

நம் இந்திய நாட்டிலும், இந்து மதத்திலும், சிறப்பாகக் கொண்டாடப் பெறும் தெய்வங்களுள், விநாயகரும் ஒருவர் ஆவர். விநாயகர் கோயில் இல்லாத ஊர் ஒன்றுகூட, நம் தமிழ் நாட்டில் இருத்தல் அரிது. பட்டி தொட்டிகள் ஆகிய எல்லா ஊர்களிலும், மூலை முடுக்கர்களிலும், சாலை சந்திகளிலும், ஆற்றங்கரைகளிலும் குளக்கரைகளிலும் ஆலமரத்தடிகளிலும், அரசமரத்தடிகளிலும், விநாயகப் பெருமான் எழுந்தருளி விளங்குதல் காணலாம். அத்துணையளவுக்கு மக்களாற் பெரிதும் விரும்பித் தொழப் பெறுபவரும், எங்கும் எவர்க்கும் எளிவந்தருளும் இயல்பினருமாகத் திகழ்பவர், விநாயகப் பெருமான்! தலைவர்களுக்கெல்லாம் மேலான தலைவர் விநாயகர். தாமே மேலான தலைவராதலின், தமக்கு ஒரு தலைவரும் இல்லாதவர் அவர்!

**பழமையும் பெருமையும் :**

விநாயகர் வழிபாடு மிகவும் தொன்மை வாய்ந்தது. நம் இந்திய நாட்டில் மட்டுமேயன்றி, இந்தியக் கலைநலம் பரவியுள்ள ஜாவா, சுமத்திரா, பாலி, போர்னியோ, பிலிப்பைன்ஸ், கம்போடியா, சம்பா, அன்னும், சயாம், மலேயா, பர்மா, சிலோன், மெக்சிகோ, பெரு போன்ற ஏனைய பிற அயல்நாடுகளிலுங்கூட, விநாயகர் வழிபாடு பரவியிருக்கின்றது.

அசோகனின் புதல்வியாகிய சுங்கமித்திரை என்பவள், விநாயகரின் திருவுருவம் ஒன்றைச் சற்றேறத்தாழக் கி. மு. மூன்றும் நூற்றுண்டில், நேபாள நாட்டிற்கு எடுத்துச் சென்றனள் என வரலாற்றுசிரியர்கள் கூறுகின்றனர். சிறிது ஏறக்குறைய கி. மு. இரண்டாம் நூற்றுண்டைச் சேர்ந்ததாகக் கருதப்பெறும் அமராவதிச் சிற்பங்களுள், விநாயகர் திருவுருவமும் காணப்படுவதாக ஜெ. பர்கெஸ் (J. Burgess) என்னும் அறிஞர் குறிப்பிடுகின்றார். எல்லோராச் சிற்பங்களிலும் விநாயகரின் சிற்பம் அமைந்து காணப்படுகின்றது. இத்தகைய பழமையும் பெருமையும் வாய்ந்த, விநாயகப் பெருமானின் சிறப்பினைக் குறித்துத், தமிழ்ப் பெருஞ் சான்றோர்களும் கலைஞர்களும், மிகவும் போற்றித் துதித்து, அழகிய கவிதைகள் பற்பலவற்றைப் பாடியுள்ளனர். அவற்றுள் ஒரு சிலவற்றை மட்டில் ஈண்டுக் கண்டு இன்புறுவோம் :

**களிற்று யானை :**

(1) யானையானது பெரிய நீர்நிலைகளைக் கலக்கும்; மலைகளை இடித்துச் சிதைக்கும்; பகைவர்கள் நிலைகுலைந்து அழியும்படி மோதும்; வண்டுகள் மொய்த்து உண்டு மகிழும்படி மதநீர் பெருக நிற்கும்; மரங்கள் அடர்ந்த காடுகளிலே வாழும். அதுபோல விநாயகராகிய களிற்று யானை, அடியவர்களின் பிறவிக்கடல் ஏழினையும் கலக்கும்; அவர்களின் தீவினைகளாகிய மலைகளை இடித்துச் சிதைத்துத் தேய்க்கும்; அடியவர்களுக்கு இடையூறு செய்யும் தீய குணங்கள், புலன்கள் கரணங்கள் முதலிய

பகைப்படைகளை நிலைகுலையும்படி மோதி அழிக்கும்; அடியவர்களின் மனமாகிய வண்டுகள் சூழ்ந்து மொய்த்துத் தியானித்து மகிழும்படி, கருணையாகிய மதவெள்ளம் பாய்ந்தோட விளங்கும். இங்ஙனம் தில்லை வனமாகிய காட்டிலே, அடியவர்கள் நினைத்தவற்றை யெல்லாம் விரைந்து ஒருங்கே அளிக்கும் கற்பகக் களிறுக எழுந்தருளித் திகழ்பவர் விநாயகர்.

நெடியஎழு பவக்கடலை உழக்கி,
வினைக்கிரி நூறி, நீங்காது ஓங்கும்
கொடியகுணம் புலன்கரணம் முதலான
பகைப்படையைக் குலைய மோதி,
அடியவர் தம் கருத்து அளி சூழ்ந்து ஆலிக்கக்
கருணைமத ஆறு பாயும்
படிபுகழும் தில்லைவனக் கற்பகக்குஞ்
சரத்தின்தாள் பணிதல் செய்வாம்.

**கற்பக மரம் :**

(2) கற்பகமரம், வளம் நிறைந்து பண்பட்ட நல்ல இடத்தில் வளர்ந்து சிறந்து ஓங்கும்; தளிர்விட்டுத் தழைக்கும்; அழகுற அரும்பும்; நறுமணத்துடன் மலரும்; செவ்விதாகக் காய்க்கும்; நன்கு கனிந்து பழுக்கும்; உண்பார்க்கு இனிய நறிய சுவை பயந்து நலம் செய்யும். நினைத்த தெல்லாம் விரைந்து ஒருங்கே அளித்தலால், விநாயகர் கற்பகமரம் போன்றவர்! கற்பக மரத்தின் இயல்புகள் பலவும், விநாயகரிடத்திலும் அமைந்து காணப்படும். விநாயகராகிய கற்பகமரம், தெய்விகம் நிறைந்த வேள்விகளைச் செய்கின்ற மறை முனிவர்களின் மனமாகிய பண்பட்ட நல்ல வயல்களில், தோன்றி வளர்ந்து உயர்ந்து ஓங்கும்; கருணை தழைக்கும்; அறம் அரும்பும்; ஞானம் பூக்கும்; அடியவர்களின் தீவினைகளைக் காய்க்கும் (சீறியழிக்கும்); முத்தி பழுக்கும்; வீடுபேற்றின்பம் ஆகிய நறுஞ்சுவையினை என்றும் இனிது நல்கும்.

திருமன்னு வேள்விமறை முனிவர்மனப்
புலத்தெழுந்து, சிறப்பின் ஓங்கிக்
கருணைதழைத் தறம்அரும்பி, ஞானம்பூத்
தகல்வினையைக் காய்த்துத், தொல்லை
இருளகன்ற முத்திபழுத் தின்பநறுஞ்சுவை
என்றும் இனிது நல்கும்;
மருமலிபூம் பொழில்ஆரூர் மாற்றுரைத்த
கற்பகத்தை வணங்கி வாழ்வாம்.

**பிரணவப் பொருள் .**

(3) விநாயகர் அகரமாகிய எழுத்தைப் போன்றவர். முதன்மையும் சிறப்பும் மிக்கவர். அறிவின் திருவுருவமாக விளங்குபவர். உலகம் எங்கும் பரவி விளங்கும் வியாபகத் தன்மை உடையவர். படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களுக்கும் காரணமாகிய, அகரம்–உகரம்-மகரம் என்னும் மூன்றும் சேர்ந்த பிரணவம் ஆகிய ஓங்காரப் பொருளின் முழுமுதல் தலைவராகத் திகழ்பவர். அடியார்கள் விரும்பும் வகைகளில் எல்லாம், பலவேறு திருமேனிகளை எடுத்து வருபவர்; அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களையும் தம்மைப் போற்றி வழிபடும் அடியவர்கட்கு அளித்தருளி, அறக்கருணை புரிபவர். அன்பில்லாதவர்களுக்கு மறக்கருணை புரிந்து, முதலில் துன்பங்களை உண்டாக்கித் தடுத்து ஆட்கொண்டு, பின்னர் நன்மைகளை விளைவித்துக் காத்தருளும் இயல்பினர்.

அகரமென அறிவாகி, உலகம் எங்கும்
அமர்ந்து, அகர உகர மகரங்கள் தம்மால்
பகரும்ஒரு முதலாகிப் பலவேறு திருமேனி
தரித்துக் கொண்டு
புகரில்பொருள் நான்கினையும் இடர்தீர்ந்தெய்தப்
போற்றுநருக்கு அறக்கருணை புரிந்தல்லோர்க்கு
நிரிகல்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைந்து
வாழ்வாம்.

**ஐங்கரன் :**

(4) விநாயகர், ஐந்து திருக்கைகளை உடையவர் ஆதலின் 'ஐங்கரன்' என்றும் அவருக்கு ஒரு சிறப்புப் பெயர் உண்டு. பொதுவாகக் கடவுளர் யாவருக்கும் நான்கு கைகளே இருக்கும். ஏனைய கடவுளருக்கு உள்ள நான்கு கைகளோடு, துதிக்கையாகிய நீண்ட பெரிய ஐந்தாவது கையையும், கொண்டவர் விநாயகர். இங்ஙனம் ஐந்து கைகள் கொண்டிருப்பது, விநாயகரின் சிறப்பியல்பை உணர்த்தும். அவர் தமது கைகளுள் ஒன்றில், தம்பொருட்டு மோதகம் என்னும் சுவை உணவு வைத்திருக்கின்றார்; மற்றொரு கையில் தேவர்

களைக் காப்பதற்காகப் படைக்கலம் போலத் தந்தம் ஏந்தியிருக்கின்றார்; பிறிதொரு கையில், தம்முடைய தாய் தந்தையர் ஆகிய உமைப் பிராட்டியையும் சிவபிரானையும் வழிபடுவதற்காக, நீர்க்கலசம் தாங்கியிருக்கின்றார். ஏனைய இரண்டு கைகளிலும் உயிர்களாகிய நம்மை, ஆணவமலமாகிய யானையானது பற்றி நலிவுறுத்தாது இருக்குமாறு, செய்தற் பொருட்டுப் பாசமும் அங்குசமும் வைத்துக்கொண்டிருக்கின்றார். தமக்கும் தேவர்க்கும் தாய்தந்தையர்க்குமாக ஒவ்வொரு கையையே பயன்படுத்தும் விநாயகர், தம்மை வழிபடும் அடியவருக்குத் தீங்கு அகற்றி, நலம் விளைவிக்கும் குறிக்கோளுடன், இரண்டு கைகளைக் கொண்டிருப்பது, அடியவர்களின் திறத்தில் அவருக்குள்ள பெருங்கருணைத் திறத்தினைப் புலப்படுத்துகின்றது.

பண்ணியம் ஏந்தும் கரம்தனக்கு ஆக்கிப்
பால்நிலா மருப்பமர் திருக்கை
விண்ணவர்க் காக்கி, அரதனக் கலச
வியன்கரம் தந்தைதாய்க் காக்கிக்,
கண்ணில்ஆணவ வெங்கரி பிணித்து
அடக்கிக் கரிசினேற் கிருகையும்
ஆக்கும்
அண்ணலைத், தணிகை வரைவளர்
ஆபத்சகாயனை, அகந்தழீஇக்
களிப்பாம்.

**கடவுளர் பலரின் வடிவம் :**

(5) விநாயகர், கடவுளர் பலருடைய கூறுகளும் ஒருங்கே அமைந்தவர்! அவர் காமனாகிய மன்மதனைப் போன்று கையிற் கரும்பை வைத்திருப்பவர்; தருமன் ஆகிய கூற்றுவனைப்போலப் பாசம் என்னும் கயிறு ஏந்தியிருப்பவர்; கொன்றைமாலை அணிந்த சிவபிரானைப்போலச் சந்திரனைத் தலையிற் சூடியவர்; தம்பியாகிய முருகனைப் போல முகமாறு (மாறுபட்ட முகம்) கொண்டு விளங்குபவர்; மாமனாகிய திருமாலைப்போலக் கோடு (தந்தம், கோவர்த்தனமலை) ஏந்தித் திகழ்பவர்; குறுமுனியாகிய அகத்தியரைப் போலக் கடல்களையெல்லாம் விளையாட்டாக வாரிப் பருக வல்லவர். தாமரை மலரில் வீற்றிருக்கும் பூமன் ஆகிய பிரமதேவனைப் போல (மேரு மலையிற் பாரதத்தை) எழுதிவைக்கும் புகழுடையவர். ஆதலின், விநாயகர் ஒருவரை வழிபட்டாலே, கடவுளர் பலரையும் தொழுது வழிபட்ட பயனை, நாம் ஒருங்கே அடைதல்கூடும்.

காமனைப்போற் கரும்பெடுத்துத்,
தருமனைப்போற்
கயிறேந்திக், கமழ்பூங் கொன்றைத்
தாமனைப்போல் மதிசூடித், தம்பியைப்
போல்
முகமாறும் தகைமை பூண்டு,
மாமனைப்போற் கோடேந்திக், குறுமுனி
போற்
கடலையெலாம் வாரித் துய்த்துப்,
பூமனைப்போல் எழுதிவைக்கும், புகழுடை
வேல்
அடிக்களிற்றைப் போற்றல் செய்வாம்!

**சித்தி விநாயகர் :**

(6) யானையை ஒரு பெரும் கூடத்தில், ஒரு பெரிய தூண் ஆகிய தறியினை நட்டு, இரும்புச் சங்கிலியாகிய விலங்கு பூட்டி, நெய்ம்மிதி ஆகிய கவளம் என்னும் உணவை இட்டுப் போற்றிப் பாதுகாப்பர். அம்முறையில், நாமும் விநாயகராகிய யானையை, நம் உள்ளமாகிய கூடத்தில் ஊக்கம் என்னும் பெரிய தறியினை நிறுவி, உறுதிமிக்க இடையருத அன்பு ஆகிய இரும்புச் சங்கிலியைக் கொண்டு கட்டி வைத்து, நம்முடைய தீவினையும் அறியாமையும் ஆகியவற்றைக் கவளம் என்னும் உணவாகப் படைத்துப் பணிந்து அன்புடன் வழிபட்டால், அவர் கருணை என்னும் வெள்ளமதம் பெருகப் பொழிந்து, நமக்கு நலங்கள் பலவும் விளைத்தருள்வார். எல்லா நலங்களும் எளிதிற் சித்திக்கும்படி அடியவர்களுக்கு இனிது அருள் புரிதலால், விநாயகருக்குச் சித்தி விநாயகர் என்பது ஒரு சிறப்புப் பெயர்!

உள்ளமெனும் கூடத்தில், ஊக்கமெனும்
தறிநிறுவி, உறுதி யாகத்
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி
இடைப்படுத்தித, தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு, கருணை என்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்.

**முடிவுரை:**

இத்தகைய சிறப்புமிக்க விநாயகப் பெருமானை, நாம் அனைவரும் நமது மன மொழி மெய்களால் தொழுது வழிபட்டு, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து, நலம் பலவும் எய்த முயலுவோமாக.

—ஆசிரியர்.

# 'நயத்திற்குச் சுந்தரனர்'

**முன்னுரை :**

தமிழ் நாட்டில் தோன்றியருளிய சான்ரோர்கள் பற்பலர். அவர்களுள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே ஒவ்வொரு சிறப்பியல்பு உண்டு. இன்னின்னர் இன்னின்ன சிறப்பியல்பை உடையவர்கள் என்று, நம் முன்னோர்கள் ஆராய்ந்தறிந்து அழகுறக் குறித்துள்ளனர். வாக்கு வன்மையிற் சிறந்தவர் **அருணகிரிநாதர்**; கனிவு என்னும் உருக்கத்திறனில் நிகரற்றவர் **மாணிக்க வாசகர்**; செந்தமிழிற் பல்வகையான வியத்தகு சந்தங்களை அமைத்துப் பாடுதலில், ஒப்புயர்வற்றுச் சிறந்து திகழ்பவர், **திருஞான சம்பந்தர்!** நுணுகி ஆராயுந்தோறும் ஒவ்வொரு சொல்லிலும் புதியபுதிய பொருள் நலங்கள் தோன்றுமாறு 'நோக்கு' என்னும் அழகமையைப் பாடுதலில், நல்லாற்றல் வாய்ந்தவர் **நக்கீரர்**; சொல்லும் பொருளும் தூயனவாக அமைய, நெஞ்சை அள்ளும் வகையில் நகையும் உவகையும் நனிசிறப்பச் சுவைதுளும்பும்படி பாடவல்லவர், **சுந்தரர்**; உயிர்க்கு உறுதிபயக்கும் உயரிய அறவுரைகளை அருளிச் செய்தலில் இணையற்றவர், **அப்பர்** என்னும் திருநாவுக்கரசர்.

**சிறந்த பாடல் :**

இவ்வாறு திறன் தெரிந்து இனிது ஆராய்ந்து, ஒரு சிறந்த பழம்பாடல் இயம்புகின்றது. அப்பாடலைப் பாடியவர் யாவர் என்று தெரிந்திலது. ஆயினும், மிகவும் பொருள்நலம் பொதிந்து காணப்பெறும் சிறந்த அப்பாடல் வருமாறு :

வாக்கிற் கருணகிரி ; வாதவூ ரர்கனிவில் ;
தாக்கில் திருஞான சம்பந்தர் ;—நோக்கிற்கு
நற்கீர தேவர் ; நயத்திற்குச் சுந்தரனர் ;
சொற்குறுதிக்கு அப்பர் எனச்சொல்.

தமிழில் இலக்கியத்திறனய்வு நூல்கள் இல்லையென்று, குறைகூறுபவர் பலர் உண்டு. அத்தகையவர்களும் அறிந்து மிகவும் வியக்கும் வகையில், இச்சிறந்த பழம்பாடல் தமிழகத்துச் சான்ரோர்கள் பலருள், ஒவ்வொருவர்க்கும் தனித்தனியே உரிய சிறப்பியல்பைச் சுருக்கமும் விளக்கமும் அமைய, நுனித்துணர்ந்து நுவன்றிருத்தல் காணலாம்.

சைவ சமய ஆசிரியர்களுள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவாரப் பாடல்கள், நவில்தொறும் நயம்மிகப் பயப்பன. சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருநாவலூரில் தோன்றியருளியவர். 'நாவலர்' எனவும் அவருக்கு ஒரு சிறப்புப் பெயர் உண்டு. கேட்பவர் நெஞ்சம் கொள்ளை கொள்ளும்படி, சதுரப்பாடு அமைய நயமுறப்பேசித் தாம் விரும்பும் செயலை முடித்துக்கொள்ளுதலில், இணையற்ற இனிய நா நலம் சான்றவர் அவர்! ஆதல்பற்றியே 'நயத்திற்குச் சுந்தரனர்' என்று, இப்பாடல் இனிது ஆய்ந்து குறிப்பிடுவதாயிற்று.

**தமிழ்ச் சமர்த்தர் :**

வேதாந்த சித்தாந்த சமரச ஞான வித்தகப்பெருஞ் சான்ரோராகிய தாயுமானவரும், சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவாரத் திருப்பாடல்களில் மிகவும் ஈடுபட்டுத் தோய்ந்து நின்று, அவரைத் 'தமிழ்ச் சமர்த்தர்' எனத் தகவுறப் பாராட்டிப் புகழ்ந்து போற்றுகின்ரூர்.

"பித்தர்இறை என்றறிந்து
பேதைபால் தூதனுப்பு
வித்த தமிழ்ச் சமர்த்தர்
மெய்புகழ்வ தெந்நாளோ"

எனவரும் தாயுமானவரின் சால்புரையும், 'நயத்திற்குச் சுந்தரனர்' என்னும் உண்

மையை, நன்கினிது வலியுறுத்துவதே யாகும். இவ்வுண்மையை விளக்கும் சான்றுகள் சிலவற்றை மட்டில், ஈண்டு ஒரு சிறிது காண்போம் :

சுந்தரர், சொல்வன்மை மிக்கவர் ; நயமாகப் பேசவல்லவர் ; தமிழ்ச் சமர்த்தர். தாம் ஏதேனும் குற்றங்கள் செய்தாற் பொறுத்தருள்க என, இறைவனை வேண்டிக்கொள்ள விரும்புகின்ற அவர், தம்முடைய குற்றங்களைப் பொறுத்தருள்தல் மட்டுமேயன்றி, அவற்றையே குணமாகவும் கொள்ளுதல் வேண்டும்என, இறைவனிடம் வற்புறுத்திப் பின்வருமாறு நயமுற வேண்டிக் கொள்கின்ருர்.

**குற்றமே குணமாகக் கொள்ளல் :**

(1) "திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள பெருமானே! யான் நின்னுடைய திருவடியை அடைந்தேன். ஏன் தெரியுமா? குற்றம் செய்யினும் பொறுத்துக்கொள்வதுடன், அவற்றையே குணமெனவும் கருதி மகிழ்ந்து அருள்புரிகின்ற நினது கொள்கையை, யான் பலகால் பலரிடத்தில் கண்டுள்ளேன். ஞானசம்பந்தர் தம்மைத் தாமே புகழ்ந்து கொண்டார்; பிறர் சிலரை இகழ்ந்து கடிந்துரைத்தார். நாவுக்கரசர் அயற் சமயம்புக்கு நின்று நின்னைப் போற்ருதே ஆற்ற நாள் போக்கினுர்; பண்டொருகால் நின்னைப் பெரிதும் இகழ்ந்து வந்தார்! திருநாளைப் போவார் என்னும் நந்தனுர், அந்நாளைய சமூகக் கட்டுப்பாடுகட்கு மாருகத் தில்லை நகருள்ளும், திருக்கோயிலுள்ளும் செல்ல விரும்பி முயன்ருர். மூர்க்க நாயனுர் சூதாடிப் பொருள் ஈட்டினுர். சாக்கிய நாயனுர் நினது திருமேனியாகிய சிவலிங்கத்தின்மீது நாளும் மறவாமற் கல்எறிந்து போந்தார்! கோச்செங்கட்சோழர் முற்பிறப்பில் சிலந்தியாக இருந்து வாய் எச்சில் ஆகிய நூலினுல் வலை பின்னி நினக்கு நிழல் செய்தார். கண்ணப்பநாயனுர் தமது மிதிஅணிந்த காலை நினது திருமுடியில் வைத்தும், வாய் கலசமாகக் கொணர்ந்த எச்சில் நீரை நின்மீது உமிழ்ந்தும், தாம் வாயிலிட்டுச் சுவைத்துப் பார்த்த எச்சில் இறைச்சியை நினக்கு உணவாகப் படைத்தும், பலபொருந்தாச் செயல்கள் புரிந்தார்! கணம்புல்லநாயனுர் எண்ணெய் கிடைக்காமையால் தமது தலைமயிரைத் திருக்கோயில் திருவிளக்கில் இட்டு எரிக்க முற்பட்டார். இங்ஙனம் முன்பு பலர் புரிந்த குற்றங்களையெல்லாம் குணம் எனவே நீர் ஏற்றுக்கொண்டருளினீர். அக்கொள்கை கண்டு, யான் நும் குரைகழல் அடைந்தேன்" எனச் சுந்தரர் நயமுறப் பாடித் துதிக்கின்ருர்.

"நற்றமிழ் வல்ல ஞானசம் பந்தன்,
நாவினுக் கரையன், நாளைப்போ வானும்,
கற்ற சூதன், நற்சாக்கியன், சிலந்தி
கண்ணப்பன் கணம்புல்லன் என்றிவர்கள்,
குற்றம் செயினும் குணம்எனக் கருதும்
கொள்கைகண்டு நின் குரைகழல் அடைந்
தேன் ;
பொற்றிரள் மணிக் கமலங்கள் மலரும்
பொய்கைசூழ் திருப்புன்கூர் உளானே"

**சங்கிலியார் திருமணம் :**

(2) சுந்தரர் தமக்குச் சங்கிலி நாச்சியாரைத் திருமணம் செய்து வைத்தருளுமாறு இறைவனை வேண்டுகின்ருர். அங்ஙனம் வேண்டுங்கால் இறைவன் தமது வேண்டுகோளை மறவாதபடி மிக்க சதுரப்பாடு தோன்றவும், நயம் பெரிதும் அமையவும், பின்வருமாறு திறம்படப் பேசுகின்ருர்:

சங்கிலியாரை எனக்கு மணம் புணர்வித்து, என்னுடைய வருத்தத்தைப் போக்கியருள்க, என அவர் நேரே கூறிற்றிலர். 'பெருமானே! நீர் உமாதேவியாகிய மனைவியை, உமது இடப்பக்கத்திற் கொண்டு மகிழ்ந்திருக்கின்றீர். அம்மட்டில் அமையாமல், நுமதுநீண்ட அழகிய சடைமுடியின்கண் கங்கை என்பாள் ஒருத்தியையும், பிறர் அறியாமற் கரந்து வைத்தருளும் காதல் உடையவராக விளங்குகின்றீர். யான் நுமது அடியேன். என் வருத்தமும் துயரமும் போக்குதல் நும் கடன். ஆதலின், நுமக்குச் சிறந்த மாலைகள் தொடுத்து, என்னுடைய உள்ளத்தின் நிறை ஆகிய கட்டினை அவிழ்த்துவிட்ட, சங்கிலி என்னும் நங்கையை எனக்குத் தந்து மணம் புணர்வித்து, என்னுடைய வருத்தத்தை நீர் போக்கியருள்க" என வேண்டுகின்ருர்.

இங்ஙனம் சுந்தரர் இறைவனை வேண்டியதாக, அவர்தம் இயல்பையெல்லாம் அரிதின் நுணுகி ஆராய்ந்து உணர்ந்தவராகிய சேக்கிழார் பெருமான்,

"மங்கை ஒருபால் மகிழ்ந்ததுவும்
அன்றி, மணிநீள் முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளும்
காதல் உடையீர்! அடியேனுக்கு
இங்கு நுமக்குத் திருமாலை
தொடுத்தென் உள்ளத் தொடை
அவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத்
தந்தென் வருத்தம் தீரும் என்றார்"

எனப்பாடியருளியுள்ளார். சேக்கிழார் பெருமான், எதனையும் தக்க சான்றும் மேற்கோளுமின்றித் தாமாகவே பாடிவிடும் இயல்பினர் அல்லர். சுந்தரரின் பண்பனைத்தையும் ஆய்ந்து உணர்ந்ததன் பயனாகவே, சேக்கிழார் இங்ஙனம் பாடியருளினராதல் வேண்டும்.

"கூடினாய் மலைமங்கையை நினையாய்
கங்கை ஆயிர முகம்உடை யாளைச்
சூடினாய் என்று சொல்லிய புக்கால்
தொழும்ப னேனுக்கும் சொல்லலும்
ஆமே."
"கட்டனேன் பிறந்தேன் உனக்கு ஆளாய்க்
காதற் சங்கிலி காரண மாக..."

என வரும் சுந்தரர் பாடலினைத் துணையும் சான்றுமாய்க் கொண்டே, மேற்குறித்த பெரிய புராணப் பாடல் அருளிச் செய்யப் பெற்றதாகும்.

**நெல் அட்டித்தரப் பணி:**

(3) சிவபிரானின் அருளால் தாம் பெற்ற நெற்குவியலை எடுத்துச் செல்லுமாறு, குண்டையூர்கிழார் சுந்தரருக்குச் செய்திகூறியனுப்ப, அந்நெற் குவியல்களைப் பரவையார் மாளிகையிற் கொண்டு போய்ச்சேர்க்குமாறு பணித்தருளும்படி, சுந்தரர் இறைவனை நயமுறப் பாடுகின்றார். "திருக்கோளிலி இறைவனே! நீ நின் உடலிற் பாதியில் உமையம்மையை வைத்திருக்கின்றாய்; படர்ந்த சடையில் கங்கையை வைத்துள்ளாய். ஆதலின், பெண்களால் ஏற்படக் கூடிய வருத்தமும் தொல்லையும், என்னைப்போல உமக்கும் நன்றாகத் தெரிந்திருக்கும். அதனை நான் விரித்து விளக்கிச் சொல்லவேண்டுவதில்லை. ஆதலால் பரவையின் பசிவருத்தம் தீரும்படி, யான் குண்டையூரிற் பெற்ற சில நெல்லைத் திருவாரூரிற் பரவையாரின் மாளிகையிற் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி பணித்தருள வேண்டும்" என்று நயம் அமையப் பாடுகின்றார்.

"பாதியோர் பெண்ணை வைத்தாய்;
படரும்சடைக் கங்கை வைத்தாய்;
மாதர் நல்லார் வருத்தமது
நீயும் அறிதி யன்றே!
கோதில் பொழில் புடைசூழ் குண்டையூர்ச்
சிலநெல்லுப் பெற்றேன்
ஆதியே அற்புதனே
அவையட்டித் தரப்பணியே"

இதன்கண், சுந்தரர் தமக்காக என்னாமல் 'பரவையார்' பொருட்டு என்றும்; பரவை என்னை வருத்துகின்றாள் அதற்காக என்னாமல் பொதுவாக 'மாதர் வருத்தம்' என்றும்; வருத்துதல் பற்றி அன்னோர் தீயர் அல்லர் எனற்கு 'நல்லார்' என்றும்; பிறர்க்குச் செய்வது அன்று தாம் அடைவது எனற்குப் பொதுவாக 'வருத்தம்' என்றும்; நான் ஒருவன் மட்டுமே அறிந்ததன்று நுமக்கும் தெரியும் எனற்காக 'நீயும் அறிதியன்றே' என்றும்; மிகுதியாய்க் கடினம் போலும் என மருமைக்காகச் 'சில நெல்லுப் பெற்றேன்' என்றும்; என்னையோ ஏவுகின்றாய் என முனியாதபடி 'அட்டித்தா' என்னாமல் 'அட்டித்தரப் பணியே' என்றும் பிறவாறும் பாடியிருத்தல், சுந்தரரின் நயம்செறிந்த நல்லியல்பிற்கு இனியதோர் எடுத்துக்காட்டாகும்!

**மகத்திற் புக்க சனி:**

(4) சுந்தரர் சங்கிலி நாச்சியாருக்குத் தாம் செய்துதந்த சூளுறவை மறந்து, திருவொற்றியூர் எல்லைகடந்து புறப்பட்டு, திருவாரூருக்குச் செல்ல முயன்றபோது கண்ணொளி இழந்த நிலையில் பாடிய பின் வரும் பாடல் இங்குக் குறிப்பிடத் தக்கது.

"மகத்திற் புக்கதோர் சனிஎனக் கானுய்
மைந்தனே மணியே மணவாளா
அகத்திற் பெண்டுகள் நான்ஒன்று சொன்னல்
அழையேற்போ குருடா எனத்தரியேன்
முகத்திற் கண்ணிழந்து எங்ஙனம் வாழ்கேன்
முக்கணு முறையோ மறையோதீ
உகைக்குந் தண்கடல் ஓதம் வந்துலவும்
ஒற்றியூர் எனும்ஊருறை வானே."

இதன்கண், இறைவனைச் 'சனி' எனவும், அதுதானும் 'மகத்திற்புக்க சனி' எனவும் குறிப்பிட்டிருத்தல் உணரற்பாலது. 'அகத்தில் பெண்டுகள் நான் ஒன்று சொன்னல், அழையேல்போ குருடா எனத் தரியேன்' என்று அருளிச் செய்திருப்பது, சுந்தரரின் சிறந்த உலகியலுணர்வையும் அனுபவத்தையும் வெளிப்படுத்துகின்றது. 'கண்ணிழந்து எங்ஙனம் வாழ்கேன்' என வினவுவது, அவர்தம் துயர்மிக்க அவலநிலையைச் சுட்டுகின்றது. 'முகத்தில் கண் இழந்து' என்பது முகத்தின் பொலிவை யுணர்த்தி, இனி அது கெடுமே என்னும் ஆற்ருமையினை அறிவிக்கின்றது. 'முக்கணு' என்னும் விளி, நீ மூன்று கண்கள் உடையவனுக இருந்தும் என்னுடைய இரண்டு கண்களைப் பறித்துக்கொண்டாயே எனக் குற்றம் சாற்றுகிறது.

"மூன்று கண்ணுடை யாய்அடி யேன்கண்
கொள்வதே கணக்கு வழக்கு ஆகில்..."
"கங்கைச் சடையீர்! உம்கருத் தறியோம்
கண்ணு மூன்றுடையீர்! கண்ணேயாய்
இருந்தால்
அங்கத் துறுநோய் களைந்தாள கில்லீர்
அடிகேள் உமக்குஆட் செயஅஞ் சுதுமே"

நண்பனுக இருந்து உதவி செய்தற்குரிய நீ, இங்ஙனம் எனக்கு இடர் விளைத்துவிட்டனையே என்பார் 'முறையோ' என்ருர். அடுத்து 'மறையோதீ' என்றது, உலகுக்கெல்லாம் நீ அறங்கூறியவனுயிற்றே, அறங்கூறிய நீயே, இங்ஙனமும் மறம் புரியலாமோ? எனவினவும் குறிப்பினது. 'உகைக்கும் தண்கடல் ஓதம் வந்து உலவும் ஒற்றியூர்' என்றது, 'உலகுக்கு அறங்கூறியநீ, என்பால் மறம் புரிந்து வெறுத்து ஒதுக்கினும், நின்னையே யான்மீண்டும் மீண்டும் புகலடைவேன்; அலைகள் கரையிற் பிரிந்து செல்லினும், மீண்டும் மீண்டும் அக்கரைக்கே திரும்பிப் போதரும்; அதுபோல யானும் இப்போது திருவாரூர்க்குச் செல்ல முற்படினும், மீண்டும் திருவொற்றியூர்க்குத் திரும்பத் திரும்ப வாராமற் போவேனே! இதற்குள் என் கண்களை ஒளியிழக்குமாறு செய்துவிட்டனையே' என்னும் துயர உணர்வைக் குறிப்பால் உணர்த்துகின்றது. இவ்வாறு இப்பாடல் ஒன்றே, இகழ்தல் புகழ்தல் நெகிழ்தல் முதலிய பலதிற உள்ளுணர்ச்சிகளையும் ஒருங்கே வெளிப்படுத்தி, ஓதுவோர் உள்ளத்தையெல்லாம் உருகவைக்கும் நயம் செறிந்து திகழ்தல் காணலாம்!

**வாழ்ந்து போதீர் :**

(5) திருவொற்றியூர் எல்லையைக் கடந்து, கண்ணொளி இழந்து, சுந்தரர் பாடிய திருப்பதிகங்கள் பலவும், மிக்க உருக்கமானவை; நயம் செறிந்தவை! அவற்றுள் தலைசிறந்து நிற்பது திருவாரூர்த் திருப்பதிகம்!

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப்
பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று
முகத்தால் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள்
அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவாரூரீர்
வாழ்ந்து போதீரே!

என்பது இப்பதிகத்தின் முதல் திருப்பாடல். இதன்கண் சுந்தரர் இறைவனிடம் பின்வருமாறு முறையீடுசெய்து கொள்கின்ருர்.

'இறைவனே! யான் உமக்கு அடிமை; அதுதானும் 'ஒருமையே அல்லேன், எழுமையும் அடியேன். அடியவர்க்கு அடியனும் ஆனேன்.' ஆதலின் யான் உமக்கே ஆளாய மீளா அடிமை. அதனுல் யான் பிறர் எவரையும் எதுவும் வேண்டுவதில்லை. வேண்டில் உம்மை மட்டுமே வேண்டுவேன். 'நலியேன் நான் உமையல்லால்.' அதுதானும் அடுத்தடுத்துப் பல்கால் வேண்டி நும்மைத் தொல்லைப்படுத்தி நலிய யான் விரும்புவதில்லை. எவ்வளவு துயரமும் துன்பமும் நேரினும், அவற்றை என் உள்ளத்தினுள்ளேயே

அடக்கிக் கொள்வேன். அவைகள் 'மூளாத் தீப்போல்' உள்ளத்தின் உள்ளே கனன்று கொண்டிருக்கும். அப்போதும் நின்பாற் கூறி முறையிட்டுக் கொள்ள யான் முற்படுவதில்லை. அங்கிலை கடந்து துயர்மீக்கூர்ந்து கைம்மிகுதலினுல், நின் பாற் போந்து முகத்தால் மிகவாடி நிற் கின்றேன். இப்போதும் நீ 'நினக்கு நேர்ந்தது என்' என்று வினவுகிற்றிலை. யான் நினது அடியேன்; ஆளாயிருக்கும் அடியேன். ஆதலின் வேறு வழியின்றி நின்பால் என் அல்லல்களையெல்லாம் வாய்விட்டுச் சொல்லி நிற்கின்றேன். என் அல்லல்களை யான் வாய்விட்டுக் கூறவும் இரக்கம் ஒன்றிலீராய்க் கேட்டும் கேளா ததுபோல் வாளாதிருக்கின்றீர். 'வாழ் விப்பன் என்று வல்லீராய் ஆண்டீர். மாற்றமேல் ஒன்றுரையீர், வாளாநீர் இருந்தீர்.' நைந்து நலிந்து துன்பப்படுதற் காகவோ நான் உமக்கு ஆட்பட்டேன்? 'நைவான் அன்று நான் உமக்கு ஆட் பட்டது அடியேன்.' வாழ்விக்கக் கடவிய நீரே என்னைத் தாழ்வித்தால், நீர்தாம் 'வாழ்ந்து போதீர்' என உள்ளம் வெதும்பி நொந்து பாடுகின்ருர் சுந்தரர்.

விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன்
விரும்பி ஆட்பட்டேன்!
குற்றம்ஒன்றும் செய்த தில்லை
கொத்தை ஆக்கினீர்!
எற்றுக்கு அடிகேள் என்கண் கொண்டீர்?
நீரே பழிபட்டீர்!
மற்றைக் கண்தான் தாராது ஒழிந்தால்,
வாழ்ந்து போதீரே.

என்ருற்போல வரும் பாடல்கள் பலவும், சுந்தரரின் சொல்வன்மை நயத்தை உணர்த்துதல் காணலாம்.

**நீரே பழிபட்டீர்:**

(6) விரும்பி ஆட்பட்டதம்மை இறைவன் ஒற்றிப்பொருள் போலக் கருதி, தம் விருப் பம்போல விற்றுக்கொள்ளுதல் ஆகாது; 'என்னையும் ஒருவன் உளன் என்று கருதி இறைஇறை திருவருள் காட்டாய்' என் கின்ருர். தாம் குற்றம் ஒன்றும் செய்ய வில்லை என்றும், ஒருகால் தாம் குற்றம் செய்ததுண்டேல், அது தாம் இறைவ னுக்கு விரும்பி ஆட்பட்டது ஒன்றே போலும் என்றும், சுட்டுவது போலச் சுந்தரர் பேசுகின்ருர். தமது கண் ணொளியை மறைப்பித்துக் கொத்தையாக் கியதால் குற்றம் செய்ததும், அதனுற் பழி பட்டதும், இறைவனே என்கின்ருர் அவர்! 'பொன் நவிலும் கொன்றையினுய்! போய், மகிழ்க்கீழ் இரு' என்று தாம் சொன்ன தற்கு உடன் பட்டதும்; தம்முடைய கருத்தை அறிந்து வைத்தும், தமக்குத் தெரியாமல் 'சூளுறவு மகிழ்க்கீழே' என்று சங்கிலியாரிடம் சென்று மறைவாக அறிவித்ததும்; திருவாரூர் சென்று வழி படப் புறப்பட்ட தம் கண்ணொளியை மறைத்ததும் ஆயின எல்லாம், இறைவன் செய்தருளிய குற்றங்களாகும் என்று சுந்தரர் வற்புறுத்துகின்ருர்.

சுந்தரர் செய்தகுற்றத்திற்காகவே, இறை வன் அவரது கண்ணொளியை மறைப்பித் தான் என்று நாம் பொதுவாகக் கருதுவது உண்டு. ஆனுல் சுந்தரரோ, தாம் குற்றம் ஒன்றும் செய்ததில்லை, இறைவனே குற்றம் செய்துள்ளான், என்பதுபோலப் பேசுகின்ருர். 'பிழைத்த பிழை ஒன்று அறியேன் நான், பிழையைத் தீரப் பணியாயே' எனவும், பிறிதோரிடத்தில் சுந்தரர் பாடுதல் காண்க. துரிசுகளுக்கும் உடனுக இருந்து ஒருவகையில் துணை புரிபவனே தோழன்! 'என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக்கு உடனுகி, மாழை ஒண்கண் பரவையைத் தந்து ஆண்டான்' என முன்னர்ப் பாடியிருத்தல் காணலாம். தோழனுக இருந்தால் தண்டித்தல் ஒல் லாது; தண்டித்தால் தோழனுக இருத்தல் இயலாது. ஆதலின் 'எற்றுக்கு என் கண் கொண்டீர்? என வினவுகின்ருர். குற்றம் செய்யாத தம்மைக் கொத்தையாக்கிக் கண்கொண்டதனுல் 'நீரே பழிபட்டீர்' என்கின்ருர். பறித்த கண்ணைத் திருப்பிக் கொடுத்தருள்க! திருப்பித்தாராது வல் லாண்மை புரிதல் அறமன்று. 'பெருமை கள் பேசிச் சிறுமைகள் செய்யில் நுமை அலாது இல்லையோ பிரானுர்?' என்னை நலிவித்த நீர்தாம் நலமுற 'வாழ்ந்து போதீர்' என மனமுடைந்து பாடுகின்ருர் சுந்தரர். 'வாழ்ந்து போதீரே' என்பதில்

உள்ள கோபமும் தாபமும், வேகமும் சோகமும், குறிக்கொண்டுணரத் தக்கன. 'வாசி வல்லீர் இந்தளூரீர் வாழ்ந்தேபோம் நீரே' (1331) எனத் திருமங்கையாழ்வார் அருளிச் செய்திருத்தலும் காண்க.

திருவோணகாந்தன்தளி :

(7) இவ்வாறே, திருவோண காந்தன் தளித் திருப்பதிகத்திலும், சுந்தரர் பாடியருளியுள்ள பாடல்கள் பலவும், தோழமை உரிமை முறையில், இறைவனை ஏளனம் செய்து பாடும் நிலையில், சுவைகெழுமி நயம் செறிந்து திகழ்கின்றன.

(1) "இறைவனே! சந்திரன் தங்கியிருக்கின்ற நுமது சடையின்மேலே உள்ள-திரைகள் வந்து புரள வீசுகின்ற-கங்கையாகிய நுமது காதலியோ, உமையவளுக்கு அஞ்சி வாய்திறந்து பேசமாட்டாள்; கணபதியோ பெருவயிற்றர்; கையில் வேலேந்திய குமரனுகிய முருகனே, இளம் பருவப் பிள்ளை; நுமது தேவியராகிய உமையம்மையோ இருநாழி நெற்கொண்டு முப்பத்திரண்டு அறங்கள் புரிந்த செட்டி (செட்டுத் தன்மை என்னும் சிக்கனம் உடையவள்); ஆதலின் எமக்குத் தக்க கூலி கொடுத்து ஆட்கொள்ளமாட்டாள். அதனல் நுமக்கும் நும் குடும்பத்தினருக்கும் நாங்கள் அடிமையாகிய பணியைச் செய்யமாட்டோம்."

(2) "நீ கொடுக்கும்போதும், எதுவுமே கொடுக்காதபோதும், நீ அருள்புரிந்தாலும் புரியாவிட்டாலும், அடியவர்கள் நும்முடைய திருவடிகளையே மிகவும் விரும்பிப் போற்றித் துதிப்பார்கள். அதுகண்டும், அந்தோ! இவர்கள் நம்மைத் தவிர வேறு ஒரு துணையும் இல்லாதவர்கள் ஆயிற்றே என்று, இரக்கம் கொண்டு, அறிவுடையவர்கள் செய்யத்தக்க உதவி எதையும் செய்ய மாட்டீர்கள். வறுமையுற்ற போழ்தும், பிணியுற்ற நேரத்தும், எதிர்பாராத ஆபத்துக்கள் நேர்ந்த காலத்தும், பெருமானே! அடியவர்கள் உம்மை அடகுவைத்து உண்டு வாழ இயலுமோ? அடியவர்களுக்கு இங்ஙனம் ஓர் உதவியும் செய்ய முடியாத, உமக்கும் உம் குடும்பத்தவர்க்கும், நாங்கள் அடிமையாகிய பணியைச் செய்யமாட்டோம்."

(3) "இறைவனேஎங்கள்வல்லமை உள்ள அளவும், என்னதான் சொல்லி, எப்படித்தான் நும்மை வாழ்த்தினலும், நீர் உமது வாயைத் திறந்து ஒரு சொல்லாவது, இல்லையென்ருே உண்டு என்ருே, கூறவே மாட்டீர்கள். எங்களை அடிமை கொள்ளுதற்காகத் தாங்கள் இருப்பது எற்றுக்கு? ஆட்கொள்ள அறிந்த நுமக்கு அருள் செய்யத் தெரியாதா? 'எல்லாம் அறிவீர் இதுவே அறியீரா?' நீர் இருப்பது எற்றுக்கு? தங்களால் எமக்கு யாது பயன்? பற்களை இழந்த இறந்து பட்ட தலையோடாகிய கபாலததில், பிச்சை ஏற்பதற்காகப் பகலெலாம் பலவிடத்தும் திரிந்து அலைகின்ற இழிதகவுமிக்க வாழ்க்கையைத் தாங்கள் கைவிடமாட்டீர்கள். பிச்சையேற்று உழல்கின்ற நீர், எமக்கு என்ன தரவல்லீர்? எமக்கு ஏதும் தர இயலாத உமக்கு யாம் ஆட்செய்ய மாட்டோம்."

தோளாள் உமைநங்கை ஓர் பங்குடையீர்!
உடுகூறையும் சோறும் தந்து ஆளகில்லீர்
ஆளாளியவே கற்றீர்! எம்பெருமான்
அடிகேள் உமக்கு ஆட்செய அஞ்சுதுமே.

(4) "ஓணகாந்தன்தளியில் உள்ள பெருமானே! நீர் அணிந்திருக்கும் மாலையோ பாம்பு; வாழ்வதோ ஆரூர்? (எவருடைய ஊரோ); ஒற்றியூர் (அடகு வைக்கப் பெற்றது என்னும் பொருளுமுடைய ஊர் ஆதலின்) உம்முடையது அன்று. தாரமாகக் கங்கையாளைச் சடையில் வைத்த அடிகளே, உம்முடைய ஊரும் சுடுகாடு, உடையும் புலித்தோல் என்ருல், அன்புடையவர்களாக நும் திருவடிகளுக்குப் பணிவிடை செய்கின்ற அடியார்கள், பெறக்கூடிய நலம்தான் யாது? "பழகா நின்று பணி செய்வார் பெற்ற பயன் ஒன்று அறிகிலேன்." ஆதலின் யாங்கள் உங்களுக்கு ஆட்செய்யமாட்டோம்; உமக்கு ஆட்செய்ய அஞ்சுகின்ருேம்."

திங்கள் தங்கு சடைக்கண் மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேல் வாய்திறவாள்;
கணபதியேல் வயிறு தாரி;
அங்கை வேலோன் குமரன் பிள்ளை;
தேவியார் கொற்றட்டி யாளார்;
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளியு ளீரே. (1)

பெற்ற போழ்தும் பெருத போழ்தும்
பேணிஉம் கழல் ஏத்து வார்கள்
மற்ருேர் பற்றிலர் என்றி ரங்கி
மதியு டையவர் செய்கை செய்யீர்!

அற்ற போழ்தும் அலந்த போழ்தும்
ஆபற் காலத் தடிகேள் உம்மை
ஒற்றி வைத்திங் குண்ண லாமோ?
ஓண காந்தன் தளியு ளீரே! (2)
வல்ல தெல்லாம் சொல்லி உம்மை
வாழ்த்தி னாலும் வாய்திறந்தொன்
றில்லை என்னீர் உண்டும் என்னீர்
எம்மை ஆள்வான் இருப்ப தென்நீர்?
பல்லை யுக்க படுத லையிற்
பகல் எலாம் போய்ப் பலிதி ரிந்திங்
கொல்லை வாழ்க்கை ஒழிய மாட்டீர்.
ஓண காந்தன் தளியு ளீரே! (3)
வார மாகித் திருவ டிக்குப்
பணிசெய் தொண்டர் பெறுவதென்னே?
ஆரம் பாம்பு வாழ்வ தாரூர்
ஒற்றி யூரேல் உம்ம தன்று
தார மாகக் கங்கை யாளைச்
சடையில் வைத்த அடிகேள் உந்தம்
ஊரும் காடு உடையும் தோலே
ஓண காந்தன் தளியுளீரே. (4)

**தண்ணியல் வெம்மையினான் :**

சுந்தரரின் தேவாரத் திருப்பதிகங்களில் இங்ஙனம் எத்தனையோ சுவை மிகுந்த-நயம் செறிந்த பாடல்கள், நெஞ்சை அள்ளும் நீர்மையவாக, நிரம்பிக் காணப்படுகின்றன. சுந்தரர் அமைத்தருளும் ஒவ்வொரு சிறு சொற்றொடர் தானும், எவ்வளவோ இன்பமும் இறும்பூதும் பயக்கின்றது. இறைவனை ஓர் இடத்தில் 'குளிர்ச்சிமிக்க வெப்பம் உடையவன்' என்னும் பொருளில் "தண்ணியல் வெம்மையினான்" எனச் சுந்தரர் குறிப்பிடுகின்றார். குளிர்ச்சியாக இருந்தால் வெப்பமாக இருத்தல் இயலாது; வெப்பமாக இருந்தால் குளிர்ச்சியாக இருக்க முடியாது. எனினும் "தண்ணியல் வெம்மையினான்" என இரண்டியல்புகளும், இறைவன்பால் ஒருங்கே இருப்பதாகச் சுந்தரர் குறிப்பிடுகின்றார். முரண்தொடை (Oxymoron) என்னும் பொருந்தா வழக்கிற்கு, இத்தொடர் மிக இனியதொரு எடுத்துக்காட்டாகும். அன்பர்களுக்கு அருள் செய்தலில் தணமையனாகவும், குற்றம் புரிந்தவழி, அவர்களை ஒறுத்துத் திருத்தி ஆட்கொள்ளுதலில் வெமமையனாகவும், இறைவன் விளங்குகின்றான். ஆதலின் 'தண்ணியல் வெம்மையினான்' என இறைவனைச் சுந்தரர் நயம் மிகக் குறிப்பிடுகின்றார்.

இவ்வியல்பு பற்றியே, இறைவனைப் பிறிதோர் இடத்தில் "இன்னதன்மையன் என்று அறியொண்ணா எம்மான்" (பரிவும் தயையும் பெரிதும் உள்ளவராயினும், மிக்க கண்டிப்பும் உடைய எம் தலைவன்) எனவும்; "ஒழிப்பாய் என்வினையை உகப்பாய் முனிந்தருளித் தெழிப்பாய் மோதுவிப்பாய் விலை ஆவணம் உடையாய்" எனவும் அருளிச் செய்திருக்கின்றார். 'உகப்பாய்' என்றது தண்மை; 'முனிந்தருளித் தெழிப்பாய் மோதுவிப்பாய்' என்றது வெம்மை என உணர்க.

**திருத்தொண்டத் தொகை :**

பொருள் பொதிந்த அரிய இனிய சிறந்த தொடர்களை மிக்க சதுரப்பாடு தோன்ற, நயம்துளும்ப அமைத்தருளும் அருமைப்பாட்டில், சுந்தரர் தலைசிறந்த பேராற்றல் வாய்ந்தவர் என்பதை, தேசம் உய்ய அவர் அருளிச் செய்த திருத்தொண்டத் தொகைப் பதிகம் ஒன்றினாலேயே இனிது தெளியலாம். கல்வியறிவு பெறாத கண்ணப்பரைக் "கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்" என்றும்; முத்தநாதனால் வஞ்சித்துக் கொல்லப் பெற்ற மெய்ப்பொருள் நாயனாரை "வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருள்" என்றும்; பிறவியிலேயே குருடர் ஆகிய தண்டியடிகள் நாயனாரை "நாட்டம் மிகு தண்டி" என்றும்; திருநீலகண்டர் எனனும் பெயரால் அடியார்கள் இருவர் இருந்தமையின் ஒருவரைத் "திருநீலகண்டத்துக் குயவனார்" என்றும்; மற்றொருவரை "திருநீலகண்டத்துப் பாணனார்" என்றும்; சுந்தரர் பாடியுள்ள நுணுக்கமும் நயமும் பல்காற் சுவைத்துணர்ந்து மகிழத் தக்கனவாகும்.

**முடிவுரை :**

இதுகாறும் கூறிய வாற்றால் 'நயத்திற்குச் சுந்தரனார்' என்னும் நல்லுரையின் சிறப்பும் பொருத்தமும் இனைய என்று, யாவரும் இனிதுணரலாம். நயம்செறிந்த நல்ல இனிய அருட்பாடலாகத் திகழும் சுந்தரரின் செந்தமிழ்த் தேவாரத் திருப்பதிகங்களை, நாம் அனைவரும் நயந்தினிது பல்கால் ஓதிப் பயன்கொண்டு உய்ய முயல்வோமாக.

(சுந்தரமூர்த்தி சுவாமிகளின் குருபூசை விழாவில், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பணித்தபடி, 1—8—68 வியாழன் அன்று, சென்னைத் தியாகராய நகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தில், 'ஆட்சி மொழிக் காவலர்' திரு கி. இராமலிங்கனார் எம். எ., அவர்கள் தலைமையில், ஆற்றிய சொற்பொழிவைத் தழுவியது.) —ஆசிரியர்.

# திருப்பாவைச் செழும்பொருள்

(முற்றெடர்ச்சி)

சிற்றஞ் சிறுகாலே
வந்(து) உன்னைச் சேவித்(து) உன்
பொற்று மரையடியே
பொற்றும் பொருள்கேளாய்;
பெற்றம்மேய்த் துண்ணும்
குலத்தில் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக்
கொள்ளாமல் போகா(து);
அற்றைப் பறைகொள்வான்
அன்றுகாண்: கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ்
பிறவிக்கும் உன்தன்னோ(டு)
உற்றோமே ஆவோம்;
உனக்கேநாம் ஆட்செய்வோம்;
மற்றைநங் காமங்கள்
மாற்(று) ஏலோ ரெம்பாவாய்!

**சிற்றஞ் சிறுகாலே:** 'செங்கல் பொடிக் கூறை வெண்பல்தவத்தவர்' என்று தாம சரும் உணரும்படியான நேரம் காலை; 'ஆய்ச்சியர் மத்தினுல் ஓசைபடுத்த' என்று இடைச்சிகள் உணர்ந்து தம் தொழிலில் ஈடுபடும்படியான நேரம் சிறுகாலை; முனிவர் களும் யோகிகளும் துயில் உணரும்காலம் சிற்றஞ்சிறுகாலை. சிறுகாலையில் வந்தாற் காணவொண்ணுது என்று, சிற்றஞ்சிறு காலையிலேயே வந்தார்கள். 'வெட்டவெடி யாலே' என்னுமாப் போலே இதுதான் ஒரு சாதிப் பேச்சு.

**வந்து:** நீ இருந்த இடத்தே நாங்கள் வந்து. சேதனர்க்குப் பகவத் லாபம் அவன் வரவாலேயாய் இருக்க, யாம் விருப்ப மிகுதியாலே வந்தோம் என்கிறுர்கள். அள விறந்த விருப்பம் வரிசைமுறை அடைவைப் பொறுக்காதிறே.

**உன்னைச் சேவித்து:** பலன் வேண்டா மல் சாதன காலத்திலே சுவைக்கும் உன்னைச் சேவித்து.

**உன் பொற்றுமரை அடியே:** அடியார் களுக்கு அடியிலேயிறே ப்ராப்தி. எல்லார்க்கும் பொதுவாய் இருக்கையும், பேரழகினதாய் இருக்கையும், கண்டால் விடவொண்ணுதிருக்கையும், விட்டால் பிழைக்கவொண்ணுதிருக்கையும் பற்றி, அடியைப் 'பொன் அடி' என்றுர்கள். அது தானும் வெறும் பொன்னடியாய் உள்ள தோ, பொற்றுமரை அடியன்றே! பொன் னும் பூவும் புறம்பே தேடவேணுமோ? எல்லாம் உன் திருவடியே என்கிறுர்கள்.

**போற்றும்:** போற்றுகையாவது சுவா மிக்கு மங்களாசாசனம் பண்ணுகை.

**போற்றும் பொருள்:** நாங்கள் விரும்பு கின்ற பெரும்பயன்.

**கேளாய்:** முன்பாக இருக்கின்றவனைக் 'கேளாய்' என்பது எற்றுக்கு என்னில், இவர்களுடைய கண் கனிவாய் முதலிய வற்றில் ஈடுபட்டுக் கேளாதவன் போல் அவன் இருந்தமையால், உன்பராக்கை விட்டு நாங்கள் சொல்லுகிற வார்த்தை யைக் கேளாய் என்கிறுர்கள்.

'கேளீரோ' என்று பெண்களுக்கு முதலிலே கிருத்தியாம்சம் சொன்னுர்கள்; கேளாய் என்று இங்கு இவனுக்கு கர்த்தவ் வியாம்சம் சொல்லுகிறுர்கள். சீரிய சிங்காசனத்திலே அன்றே நீ இருப்பது, தர்மாசனத்திலே இருப்பார்க்குக் கேட்க வேண்டாவோ?

**பெற்றம் மேய்த்து உண்ணும்:** பிறப் பிலியாய்ப் பிறவாதார் நடுவே இருந்து பிறவியற்றுர்க்கு முகம் கொடுக்கின்ற நீ, பசுக்கள் மேய்த்து உண்ணக் கடவதான

இடைச்சாதியிலே வந்து பிறந்தது எற்றுக்கு? தாழ்ந்தவர்களைப் பாதுகாக்கும் குலத்திலே பிறக்கச் சொன்னர் யார்? பிறரையும் காப்பாற்ருமல் தம்மையும் காப் பாற்றிக்கொள்ளாமல் உள்ள இழிந்த இடையர் குலத்தில், நீ எதற்காகப் பிறந் தாய்? நீ ஆசைப்பட்டுப் பிறந்த பிறவி யன்ரே இது.

எங்களை: பசுக்களுக்கு வேறு காவலர் உண்டாகிலும், உன்னை ஒழிய வேறு பாது காப்பார் இல்லாத எங்களை; பசுக்கள் தாமும் பிரித்துத் தின்னும், பிறரும் ஐயோ என்னும்படி இருக்கும், இவ்விரண்டு தன் மையும் இல்லாத எங்களை.

குற்றேவல்: அந்தரங்கத் தொழில். அன்றிக்கே, உசிதமான அடிமை என்று மாம்.

கொள்ளாமற் போகாது: எங்களையும் வடிவழகைக் காட்டி 'உண்ணும் சோறும் பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான்' என்னும்படி உன் இயல்புக்கு ஏற்றகைங் கர்யம் தாராதே போகை முறையோ? ஆசையை விளைவித்த உனக்கு அதன் காரியம் செய்ய வேண்டாவோ? நாங்கள் விடநினைத்தால் நீதான் விடவில்லையோ?

இற்றைப் பறைகொள்வான் அன்று காண்: இன்ருெரு பயன்கொண்டு போம் அவர்களோ? நாங்கள் உன்னை அங்ஙனே விடுத்துமோ? அன்புடையார் இடத்தே சென்று 'தண்ணீர்' என்ருல், தண்ணீரை வார்ப்பார்களோ? சொல்லுகிற வார்த்தை யையும் எங்களையும் அறிந்தன்ரே பரி மாறுவது. நாங்கள் பறை என்ருல் வேறே ஒன்று தொனிக்கின்றதென்று அறிய வேண்டாவோ. எங்களை நீ கொள்ளும் அத்தனை ஒழிய, நாங்கள் உன்பக்கலிலே உன்னை ஒழியவும் கொள் வது ஒன்றுண்டு என்றிருந்தாயோ?

கோவிந்தா: பசுக்களைக் காப்பவனே. பசுக்களின் பின்னே திரிவார்க்குப் பெண் கள் வார்த்தையின் கருத்துத் தெரியா தோ? பசுக்களின் பின்னே திரிவார்க்கு அவற்றுக்குள்ள அறிவுதான் உண்டோ? நீ பசுக்களை மேய்த்தால் எங்களைத் துரத்த வேண்டுமோ?

உன்றன்னேடு உற்ருேமேயாவோம்: எங்களையும் எங்கள் பயனையும் மறந்தாற் போலே, நீ உன்னையும் உன் பிறவியை யும் மறந்தாய் ஆயினும், நீ உடையான் ஆகவும், நாங்கள் உன் உடைமையாக வும், இவ்வுறவு என்றும் கிடைக்கும்படி அன்ரே யாங்கள் வேண்டுவது!

இங்கு ஓர் உறவைக் குறிப்பிட்டு அது வாக வேணும் என்னது ஒழிந்தது, எல்லா உறவும் நீயே ஆகவேணும் என்கைக்காக. ஓர் உறவைக் குறித்து அது உண்டாக வேணும் என்று ஒன்றைச் சிறப்பித்தால், அல்லாதவை இல்லையாய் ஒழியும் ஆதலின், பொதுவே கூறினர்கள். "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வ மும் நன்மக்களும்" என்னக் கடவதிறே. "பெற்ற தாய் நீயே பிறப்பித்த தந்தை நீ மற்றையார் ஆவாரும் நீ" என்று இருக்க வேணும்.

உற்ருேமே யாவோம்: உறவுரிமை மட்டில் போதாது. அவ்வுறவில் பத்து மாதம் பிரிந்திருத்தல், பதினலாண்டு பிரிந் திருத்தல், பதினறு ஆண்டு பிரிந்திருத்தல் என்பன போன்ற நிலைகள் நேர்தல் ஆகாது.

ஆட்செய்வோம்: வெறும்உறவு மட்டில் அமையாது. பேற்றுக்குப் பயனுன பணி விடைகள் செய்யப் பெறவேணும். அரசுக்குப் பட்டம் கட்டி அருகிருக்க வொண்ணுது.

உனக்கே ஆட்செய்வோம்: உனக்கும் எங்களுக்குமாய் இருக்கிற இருப்பைத் தவிர்ந்து 'தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே' என்னுமாபோலே, நீ எங்களை ஆட் கொள்ள வேணும். ஆட்செய்கைதான் எங்கள் விருப்பத்தாலேயன்றி, நீ உகந்த தாக வேணும். நீ உகந்து ஏவினதே நாங்கள் செய்யப் பெற வேணும். 'உன்றன் திருவுள்ளம் இடர் கெடுத்தாளும்' என்னக் கடவதிறே. அகங்காரத்தை உட்கொண்ட அடிமை புருஷார்த்தம் ஆகாது.



ஊர்த்துவ தாண்டவர்
திருப்பனந்தாள் கோயிற் சிற்பம்



திருப்பனந்தாள் செஞ்சடையப்பர் கோயிற்
கும்பாபிடேகக் காட்சி



யானை உரித்த பிரான்
(கஜ சம்ஹாரர்)
திருப்பனந்தாள் கோயிற் சிற்பம்



முப்புரம் எரித்த முதல்வர்
திருப்பனந்தாள் கோயிற் சிற்பம்

**மற்றைநம் காமங்கள் மாற்று :** நாங்கள் எங்களுக்கு என்றிருப்பதுவும், நீ இவர்களுக்கு என்றிருப்பதுவும் ஆகிய இரண்டும் விரோதியாகையாலே, அதனை நீக்கித் தரவேணும் என்கிறார்கள். இப்பாட்டில் 'கோவிந்தா' என்று அகாரப் பொருளும்; 'உனக்கே' என்று உகாரப் பொருளும்; 'நாம்' என்று மகாரப் பொருளும் சொல்லப் பட்டது. "உன்றன்னோடு உற்றோமே யாவோம்" என்கிற இடத்தாலே நாராயண பதத்தின் பொருளும், "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்" என்றதனால் சதுர்த்திப் பொருளும், "மற்றை நம் காமங்கள் மாற்று" என்று நமசில் பொருளும் கூறப்பெற்றது. நம என்பது நடுவே இருப்பது சொரூப உபாயங்கள் இரண்டிலும் கிடக்கிற விரோதியைப் போக்குகைக்கிறே. (29)

சொரூபவிரோதியும்-சாதனவிரோதியும்-பிராப்தி விரோதியும்-பிராப்பிய விரோதியும் என்று விரோதிகள் இருப்பது நால்வகைப் படும். அதில் சாதனவிரோதியும், பிராப்தி விரோதியும் கீழ்ப்பாட்டிலே கழிந்தமை சொல்லிற்று. மற்றைய இரண்டும் இப் பாட்டிலே கழிக்கப்படுகின்றன.

வங்கக்கடல் கடைந்த
　　மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச்
　　சேயிழையார் சென்(று) இறைஞ்சி
அங்கப் பறைகொண்ட
　　ஆற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல்
　　பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை
　　முப்பதும் தப்பாமே
இங்(கு)இப் பரிசுரைப்பார்
　　ஈரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச்
　　செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற்(று)
　　இன்புறுவர் எம்பாவாய்!

"கன்றிழந்த தலைநாகு தோற்கன்றிற்கும் இரங்கு மாபோலே, இப்பாசுரம் கொண்டு போக நமக்கும் பலிக்கும்" என்று பட்டர் அருளிச் செய்வர்.

**வங்கக் கடல்:** கடல் கடையாநிற்க மரக்கலங்கள் அலையாதபடி கடைந்த திறமை. கடைந்த போது சுழன்று வருகையாலே கடல் முழுவதும் மரக்கலமாய் நின்றபடி என்றுமாம். (வங்கம்— கப்பல்).

**கடல்கடைந்த :** பாற்கடலைக் கடைந்து பிராட்டியைப் பெற்றாற் போலே, இங்குத் தயிர்கடைய என்று ஒருகாரணமாய்க் கன்னிப்பெண்களைப் பெறக்கடவனாய் இருப்பது. பிறர்பொருட்டு உடம்பு நோவக் கடல்கடைந்து அவர் விரும்பியனவற்றை அளித்தருளிய சீலவான் என்கை.

கிருஷ்ணனைக் கவிபாடத் தொடங்கிக் 'கடல் கடைந்த மாதவனை'ச் சொல்லுகை ஏற்புடைத்தோ என்னில், "விண்ணவர் அமுதுண்ண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே" என்றபடி, தேவ காரியம் என்று ஒரு பெயரிட்டுப் பெரிய பிராட்டியாராகிய பெண்ணமுதத்தைப் பெறுகைக்காகக் கடல் கடைந்த தன்மை. ஊரார் காரியத்தை ஒரு காரணமாக்கிப் பெண்களைப் பெறுகைக்காக நோன்பிலே ஈடுபடுவித்த கிருஷ்ணனுடைய இயல்பை ஒத்திருப்பதனாலே, அதனை இங்கு இயைத்துச் சொல்லுகிறார்கள்.

**மாதவனை :** திருமகளோடு கூடியிருப்பவன். அடியார்குற்றம் பொறுப்பித்து அவர் விருப்பங்களை நிறைவேறச் செய்விப்பார் அருகே உண்டாகவேணுமிறே. தாயின் முன்பு குழந்தைகள் செய்த குற்றம் தந்தைக்குத் தோற்றாதவாறு போலே, பிராட்டியின் சந்நிதி உண்டானால் சேதனர்களின் குற்றங்கள் பெருமாளுக்குத் தோற்றாது என்கை.

**கேசவனை :** பிராட்டியோடு கூடும் கலவிக்கு விரோதிகளைப் பெண்களோடுகூடும் கலவிக்கு விரோதியான கேசி என்னும் அரக்கனைக் கொன்றாற்போலே போக்க வல்லவன். பிரம்ம ருத்திராதிகளுக்குக் கோது கொடுத்துத் தன் வைபவம் தோற்ற நின்ற நிலையைச் சொல்லிற்றாகவும் ஆம். 'கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள்' என்றிறே நிரூபகம். அதற்கேற்பக் 'கேசவனை' என்றார். 'பரமன் அடிபாடி' என்று தொடங்கிக் 'கேசவனை' என்று தலைக் கட்டுகையாலே, பாதாதி கேசம் ஆகக் கிருஷ்ணனை அநுபவித்தாளாயிற்று. "அசோதை முன் சென்ன திருப்பாத

கேசத்தை" என்று இடைச்சிகளின் அநுபவம் பெரியாழ்வாருக்கு உண்டாகையாலே, அஃது இவளுக்குத் தாயச் சொத்தாய்க் கிடைத்தது.

**திங்கள் திருமுகம் :** கிருஷ்ணனோடு கலந்த கூட்டத்தாலே குளிர்ந்து மலர்ந்த முகம். 'கதிர்மதியம் போல் முகத்தான்' என்று அணுகமுடியாத் தன்மையும் உண்டு அங்கு. அனுகூலர்க்கே யான முகமாகையாலே 'திங்கள் திருமுகம்' என்கிறார்கள் இங்கு. இவனை அனுபவிப்பார் முகமும் இப்படியேயிறே என்பது. 'மதிமுக மடந்தையர்' இறே.

**சேயிழையார் :** சுவபாவிகமான அழகுக்கு மேலே அணிகலன்களாலே வந்த அழகைச் சொல்லுகிறது. 'சூடகமே பாடகமே' என்று தாங்கள் விரும்பியபடியே கிருஷ்ணனும் நப்பின்னைப்பிராட்டியும் கூடஇருந்து பூட்டின அணிகலன்களை உடையவர்கள். 'போதுவீர் போதுமினோ' என்ற போதே நேரிழையார் ஆனார்கள்; நீராடியபின்பு திருவருளில் திளைத்தபடியால், புனையிழையார் 'சேயிழையார்' ஆனார்கள்.

**சென்று :** இவ்வொப்பனையோடே அவன் வரவை நோக்கிக் காத்திராமல், நாமே போவோம் என்று இருக்குமிடம் தேடிப் போய்.

**இறைஞ்சி:** தூமலர்கள் தூவித் தொழுது வாயினால்பாடி மனத்தினால் சிந்தித்துச் செய்வனவெல்லாம் செய்வித்து.

**அங்கு :** திருவாய்ப்பாடியிலே, ஸ்ரீநந்தகோபருடைய கோயிலிலே, நப்பின்னைப் பிராட்டியின் கட்டிலிலே இருந்த இருப்பில்.

**அப்பறை :** நாட்டுக்குச் சொன்ன பறையைக் கழித்து, 'எற்றைக்கும்' என்னும் பறையை.

**கொண்ட :** 'நீ தாராய்' என்றபடியே அவன் தரப்பெற்ற.

**ஆற்றை :** நெறியினை, தங்கள் வெறுமையையும் அவனது நிறைவையும் உறவையும் முன்னிட்டுப் பிழைக்குப் பொறை கொண்டு, சுவையையும் விரைவையும் காட்டி வளைத்து, அடிமை செய்தலை விரும்பிக் கொண்ட தன்மையை.

**அணிபுதுவை :** கண்ணபிரானுக்கு நந்தகோபர் சம்பந்தம் ஏற்றமாய், அவர் வாழ்கிற ஊர் என்று திருவாய்ப்பாடியைச் 'சீர் மல்கும் ஆய்ப்பாடி' என்று சிறப்பிக்குமாறு போலே, தமக்குப் பெரியாழ்வார் சம்பந்தம் ஏற்றமாய், அவர் விரும்பிய தலம் என்று ஸ்ரீ வில்லிபுத்தூரைக் கொண்டாடுகிறார்கள்.

பிராட்டிக்கு மிதிலையும் அயோத்தியும் போலவும், நப்பின்னைக்குக் கும்பகுலமும் திருவாய்ப்பாடியும் போலவும் அன்றிக்கே, ஆண்டாளுக்குப் பிறவியும் புக்க இடமும் ஓர் ஊரிலேயேயான ஏற்றம், இவ்வூர்க்கேயன்றோ உள்ளது! பொன்னும் முத்தும் மாணிக்கமும் இட்டுச் செய்த ஆபரணம் போலே, நாய்ச்சியாரும் பெரியாழ்வாரும் வடபெருங்கோயில் உடையானுமான அலங்காரமுள்ள தேசம் இறே.

**பைங்கமலத்தண் தெரியல் :** பிராமணர்க்கு மாலையாகத் தாமரையைச் சொல்லுவர்கள். 'திருவில் பொலி மறைவாணன்' என்னும்படி பிராம்மண உத்தமரான பெரியாழ்வாருக்குத் தாமரை தார் ஆகக் கடவதிறே. "தண்ணந் துழாய் அழல் போல்" என்று வடபெருங்கோயில் உடையான் உடைய மாலைபோலே கொதித்துக்கிடவாது, பெரியாழ்வார் கழுத்தில் மாலை. பிரித்தவன் மாலைபோல் அன்றே சேர்ப்பார் மாலை.

**பட்டர்பிரான் :** பிராமணர்க்கு உபகாரகர் ஆனவர். 'வேதப்பயன் கொள்ள வல்லார்' ஆகையாலே அதன் பயனை அனைவருக்கும் உபகரிப்பவர். பட்டர்களுக்கு வித்தியாப் பிரதானம் செய்தருளிய உபகாரகர். 'மறைநான்கும் முன் ஓதிய பட்டன்' ஆகிய வடபெருங்கோயில் உடையானுக்கு மகட்கொடை அளித்த உபகாரகர்.

**பட்டர்பிரான் கோதை:** பராசர்யன் ஆன வியாசன் என்று ஆப்திக்குச் சொன்னாற்போலே, ஆழ்வார் வயிற்றிற் பிழைப்பு ஆண்டாளின் பெருமைக்குக் காரணம். 'ஆற்றப்படைத்தான் மகன்' என்றிறே

கண்ணனுக்கு ஏற்றம், ஆழ்வார் சம்பந்தம் ஆண்டாளுக்கு ஏற்றம். 'விட்டு சித்தர் தங்கள் தேவரை' என்று இவருக்குத் தேவ ராய், வடபெருங் கோயில் உடையான் நிறம்பெற்றான். இவர் மகளாய் ஆண்டாள் நிறம் பெற்றாள். 'ஒருமகள் தன்னை உடை யேன்' என்று இவள் சம்பந்தம் இறே தமக்கும் பெருமையாகப் பெரியாழ்வார் சொல்லிக்கொண்டது.

**கோதைசொன்ன :** ஆண்டாள் அனு காரத்தாலே அனுபவித்த இன்பம் புறத்தே வெள்ளம் இட்டபடி. கோபியர்களின் நிலையை அடைந்து 'அணிகுருகூர்ச் சட கோபன் சொன்ன' என்று பும்ஸ்துவம் மேலிடும்படியான குற்றமற்றிருக்கை. அனைத்து வேதங்களின் முடிவான பொருள்களெல்லாம் பயன்பட்டு அனை வரும் உய்யும்படியாகப் பாடிய. தான் தோன்றியான வேதம்போல் அல்ல, இதற் குப் பிறப்பால் உண்டான ஏற்றம் உண்டு. திருப்பாற்கடல் நாதனைவிட, ஒருத்தி மக னாய்ப் பிறந்தவனுக்கிறே வரும் ஏற்றம் உள்ளது.

**சங்கத்தமிழ் மாலை :** 'சங்கம் இருப்பார் போல் வந்து' என்று, ஐந்துலட்சம் குடி யில் பெண்கள் திரளாக அனுபவித்த அனுபவத்திற்கு ஆண்டாளும் தன்திறத் தில் பெண்களுக்குத் திரள இருந்து சொன்ன பாசுரம். 'குழாங்களாய்' என் னும்படி திரள் திரளாக அனுபவிக்கவேண் டும் பிரபந்தம். 'சங்கமுகத்தமிழ்மாலை' என்னக் கடவதிறே.

**தமிழ்மாலை :** 'எவர்க்கும் சிந்தைக்கும்' எட்டாத பொருள், பெற்றம்மேய்த்து உண் ணும் இடைச்சேரியிலே வந்துபிறந்து எளி யன் ஆனாற் போலேயும், உத்தம குலத் திலே பிறப்புடைய ஆண்டாள் ஆயர் சிறுமியர் திரளிலே ஒருத்தியாய்ப் பொருந் தினாற் போலேயும், அருமறையின் பொரு ளான உபநிடதங்கள் தமிழாய் வந்து அனைவருக்கும் எளிமையானபடி.

**மாலை :** பாவநம் ஆன அளவன்றிக்கே, போக போக்கியமுமாய்த் தலையாலே சுமக்க வேண்டும்படி, தலைமணியாய் இருக்கை.

**கோதை சொன்னமாலை :** மாலைக் கட் டின மாலை. அடுத்த பத்தியோடே இரண்டு தலையும் தாள்பூவும் நடுவே நாய கமும் ஆகத் தொடுப்புண்டமாலை.

**முப்பதும் :** திருமந்திரமும் திருப்பல் லாண்டும் போலே சுருங்கி இருத்தல், வேத மும் திருவாய் மொழியும் போலே விரிந்து இருத்தல் என்பன இன்றி, வேண்டுமவை எல்லாம் மிகுதியும் குறைவும் இன்றி, விளங் கும் முப்பது பாடல்களும்; 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்று சுருக்க மாகச் சொன்ன சொரூபம்-உபாயம்- பலன் என்னும் மூன்றையும் ஒன்று பத் தாகச் சொன்ன முப்பது பாடல்களும்.

**முப்பதும் தப்பாமே :** இதில் ஒரு பாட் டும் தவறாமல். விலையில்லாத எழில் மணி களால் செய்யப்பெற்ற ஒரு பெரும் மாலை யில் ஒரு மணி குறைந்தாலும் நெடும் பாடாய் இருக்குமிறே. அப்படியே ஒரு பாட்டுக் குறைந்தாலும் மிகப் பெரிய இழப் பாய் இருக்கும் என்கை. இம் முப்பது பாட்டிலும் நழுவ விடலாவது ஒரு பாட்டும் இல்லை.

**இங்கு :** பிற்பட்ட காலத்திலே இப்பரி மாற்றத்திற்கு மேட்டு மடையான இவ் வுலகத்தில்.

**இப்பரிசு உரைப்பார் :** இந்த முறைமை தவறாமல் இவ்வுணர்ச்சிப் பெருக்கத்தோடு இப்பாசுரத்தைச் சொல்லுபவர்கள்.

திருவாய்ப்பாடியில் பெண்கள் சமகாலம் ஆதலாலும், ஆண்டாள் அனுகாரத்தா லும், கிருஷ்ணானுபவம் பெற்றார்கள்; ஆனால் இவர்களுக்கோ வாயாற் பாடும் அளவிலேயே கிருஷ்ணானுபவம் எளிதில் கிடைப்பதாகும்.

**ஈரிரண்டு தோள் :** பெண்களை அணைக் கப்புக்க கிருஷ்ணனுக்குத் திருத்தோள்கள் பணைத்தபடி. உகவாதார்க்கு இறே தோள் கள் இரண்டாய்த் தோற்றுவது; ஆசைப் பட்ட பெண்களுக்கு நாலாய்த் தோற்றும் இறே. வங்கக்கடல் கடைந்த தோள்கள் நான்கும் கண்டிடப் பெற்றார்கள்.

**மால்வரைத்தோள் :** மதுரக் கொழுஞ் சாறு கொண்ட சுந்தரத் தோளாய் இராமல்

காத்தூட்டவல்ல திண்மையைச் சொல்லு கிறது. பெரியபிராட்டியார்க்கும் கோபி மார்க்கும் விளையாடலாம் படியான மலை யைப் போன்ற தோள்கள்.

**செங்கண் திருமுகத்து :** பெண்களைக் கண்ட பின்பு திருக்கண்களும் செம்மை பெற்றுத் திருமுகமும் குளிர்ந்தபடி. இவர் களைப் பிரிந்த போதிறே முகமும் விழியும், வற்றிய நீரில் தாமரைப்பூப் போலே வாடு வது. 'கதிர்மதியம் போல் முகத்தான்' 'பங்கயக்கண்ணன்' 'செங்கண்' 'அங்கண்' என்று தொடக்க முதல் இம்முகமும் பார் வையும் இறே, இவர்கள் நெஞ்சில் கிடங் தன.

**செல்வத் திருமாலால் :** நித்திய விபூதி லீலா விபூதி என்னும் இருவகை உலகை யும் செல்வமாக உடைய திருமகள் கேள் வன். 'திருத்தக்க செல்வன்' என்றபடி செல்வத்துக்குத் தகுதியானவள். 'திருவுக் கும் திரு' ஆகிய செல்வு, செல்வச்சிறுமி யரைப் பெற்ற பின்பு சிறந்தது.

இங்கு உத்தரவாக்கியத்தில் ஸ்ரீமத் சப் தம் சொல்லுகிறது. ரகசியத் துவயத் தினும் மறைந்து கிடந்த லக்ஷ்மி சம்பந்தம் வாக்கியத் துவயத்திலே இறே வெளியா கிறது. இப்பாட்டில் தொடக்கத்திலும் முடிவிலும், பிராட்டியின் சம்பந்தத்தைச் சொல் லுகையாலே, துவயத்தில் சொல்லு கிறபடியை இங்குச் சொல்லிற்றுயிற்று.

**எங்கும் :** காண்பது காணப்படாதது ஆகிய எல்லா இடங்களிலும்; இங்கிருக் கும் நாளிலும் பரமபதம் சென்று வைகும் நாளிலும்.

**திருவருள் பெற்று :** இப்பிரபந்தம் கற் றவர்கள் இருந்த இடத்திலே பெருமாளும் பிராட்டியுமாய் என்றும் எழுந்தருளியிருக் கும்படி அருளைப் பெற்று. 'திருமாலால் அருளப்பெற்ற' 'திருமால் மகளால் அருள் மாரி' என்று இவளுடைய அருள் பெறு கையிறே சிறப்பு.

**இன்புறுவர்:** இன்பமே உற்று மகிழ்ந்து வாழ்வார்கள். இங்கிருக்கும் நாளில் உலக மக்களில் வேறுபட்டுத் திருப்பாவையின் சிறப்பையும், ஆண்டாளின் சீர்மை சீலம் ஆகியவற்றையும், இடையருது நினைந்து வழிபட்டு இன்பம் நுகர்வார்கள். அங்குச் சென்ருல் நிலைபேருன சேர்க்கையிலே 'மிக எல்லை நிகழ்ந்தனம்' என்னும்படி பரம ஆனந்தத்திலே திளைப்பார்கள்.

**திருமாலால் இன்புறுவர் :** இன்பம் பயக்க இறே; அவர்கள் தாம்இருப்பது! "அடியேனுக்கு இன்பாவாய், பொன்பாவை கேள்வா'' என்றதிறே.

**இன்புறுவர் :** இறைவனைக் கலத்தலால் ஆகிய எல்லை இல்லா இன்பத்தை நுகர் வார்கள்.

**எம்பாவாய் இன்புறுவர் :** எங்கள் பாட லாலே இன்பமடைவார்கள். நாங்கள் யாதொருபடி இன்பம் உற்ருேம், அப்படி தாங்களும் இன்புறுவார்கள்.

"விடிவோரையில் எழுந்திருந்து முப்பது பாட்டையும் அநுசந்தித்தல், மாட்டிற்றில ளுகில் 'சிற்றஞ் சிறுகாலே' என்கிற பாட்டை அநுஸந்தித்தல், அதுவும் மாட் டிற்றிலனுகில் நாமிருந்த இருப்பை நினைப் பது' என்று பட்டர் அருளிச் செய்வர்.(30)

—ஆசிரியர்.

---

## செய்திச் சுருக்கம்

*மலைப்பாதை திறப்புவிழா :* திருத்தணிகை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானத்தின் சார்பில், 31–8–68 அன்று சிறப்புற நிகழ்ந்தது. இறைவணக்கத்தின்பின் அறநிலைய ஆணையர் திரு. ஆ. இராதாகிருஷ்ணன் M.A.B.L., வரவேற்புரை நிகழ்த்தினுர்கள். தமிழக அறநிலைய அமைச்சர் மாண்புமிகு நாவலர் இரா. நெடுஞ்செழியன் M.A., அவர்கள் தலைமையில், தமிழக முதலமைச்சர் மாண்புமிகு திரு. சி. என். அண்ணுதுரை M.A., அவர்கள் மலைப்பாதையைத் திறந்துவைத்து உரையாற்றினுர்கள். நெடுஞ்சாலைத் தலைமைப் பொறியாளர் திரு. ஓ. சிவசங்கரன் BE., திரு. கே. விநாயகம் M.L.A., சட்ட மன்றத் துணைத்தலைவர் திரு. புலவர் கே. கோவிந்தன் M.A., ஆகிய பெருமக்கள் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்தினுர்கள். அறங்காவலர் குழுத்தலைவர் திரு. ஜி. எஸ். துரைசாமி முதலியார் அவர்கள், நன்றியுரை நவின்ருர்கள். நாட்டு வாழ்த்துடன் விழா சிறப்புற நிறைவுற்றது.

—ஆசிரியர்.

# மகாபாரதம்

அருண்மொழியரசு

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்.

குபேரனுடைய சைத்ரரதம் என்ற பேருள்ள பூங்காவைப் போன்ற ஒரு வனத்தைக் கண்டான் இந்திரன். அவ் வனத்தின்கண் தாமரைத் தடாகத்தில் தேவயானியும், அசுரவேந்தனுகிய சர்மிஷ்டையும், மற்றத் தோழிகளும் ஆடைகளைக் கரையில் வைத்துவிட்டு, நீராடிக் கொண்டிருந்தார்கள். இந்திரன் காற்று வடிவாக வந்து ஆடைகளை ஒன்றுபடுத்தினுன்.

கன்னிகைகள் நீராடியபின், தத்தம் ஆடைகளை எடுத்து உடுத்திக்கொண்டார்கள். சர்மிஷ்டை தான் வைத்த இடத்தில் இருந்த தேவயானியின் ஆடையை எடுத்து உடுத்திக் கொண்டாள். தேவயானி வந்துபார்த்து "நீ என் மாணவியாக இருந்தும் என் ஆடையை எடுத்து உடுக்கலாமா? இது உனக்குத் தருமமா?" என்று கேட்டாள்.

சர்மிஷ்டை "உனது பிதா என் பிதாவிடம் ஊதியம் பெற்று வாழ்கின்றார். நான் அரசகுமாரி. என் தந்தை தருகின்றவர். உன் தந்தை பெறுகின்றவர். யாசிப்பவருடைய மகளாகிய உனக்கென்ன வாய்?" என்று கூறிச் சினந்து ஆடையை அவிழ்த்துத் தந்தாள். அன்றியும் தேவயானியைக் கிணற்றில் தள்ளிவிட்டு, இறந்தாள் என்றெண்ணித் தன் நகரஞ் சேர்ந்தாள்.

யயாதி மன்னன், வேட்டையாடிக் களைத்துத் தாகத்துடன் வந்து கிணற்றைப் பார்த்தான். அக் கிணற்றில் நீர் அதிகம் இன்மையால் சேற்றில் நின்று, வருந்திக் கொண்டிருந்த தேவயானியைக் கண்டு திடுக்கிட்டான். "அழகிய ஆரணங்கே! நீ யார்? கொடிகளும் புற்களும் மூடிய இக்கிணற்றில் எப்படி விழுந்தாய்? உள்ளதைச் சொல்" என்று கேட்டான்.

யயாதி, அவளுடைய வலக்கரத்தைப் பற்றித் தூக்கிக்கரைசேர்த்தான். சேர்த்து, "பெண்மணியே! இனி நீ உன் இருப்பிடம் போகலாம்" என்றான்.

தேவயானி "வேந்தர் கோமானே! நீர் என் வலக்கரத்தைப் பற்றியபடியால் கணவனுகி விட்டீர். ஆதலால் கன்னிகையான என்னை அழைத்துக் கொண்டு போம். நான் உனக்கு மனைவி" என்றாள்.

"மாதரசே! நீ சுக்கிரனுடைய மகள்; அந்தணர் குலம். நான் அரசர் குலம். சுக்கிரர் உலகங்கட்கெல்லாம் ஆசாரியர். அவர் அனுமதியின்றியும், குல மாறுபாடாகவும், நான் உன்னை ஏற்றுக் கொள்ள மாட்டேன்" என்றான். அதற்கு அவள், "அரசே! என் பிதாவைக் கொண்டே உம்மை வரிப்பேன். சென்று வாரும்" என்றாள். அவன்விடைபெற்றுச் சென்றான்.

தேவயானி ஒரு மரத்தின்கீழ் நின்று அழுது கொண்டிருந்தாள். பெண் வரத் தாமதித்தபடியால், சுக்கிரர் மனம் வருந்திப் பெண் மீதுள்ள பட்சத்தால் தளர்ந்து, தாதியைப் பார்த்து 'நீ சென்று தேவயானி எங்கு சென்றாள்? என்று தேடியழைத்துவா' என்று கட்டளையிட்டார். தாதி, தேவயானி விளையாடுகின்ற இடங்

கட்கெல்லாம் சென்று தேடினுள். மரத்தடியில் நின்று அழுகின்ற தேவயானியைக் கண்டாள். "அம்மா! உனக்கு என்ன கவலே? ஏன் இங்கே அநாதையாக நின்று அழுகின்ருய்?" என்று கேட்டாள். "தாதியே, இனி நான் விருஷபர்வாவின் நகரத்துக்கு வரமாட்டேன். இதனை என் பிதாவுக்குச் சொல்" என்று கூறிச் சர்மிஷ்டைசெய்த கொடுமையைக் கூறினுள். தாதி ஓடி நடந்ததைச் சுக்கிராச்சாரியரிடம் கூறினுள்.

அசுர குருவான அவர், மகளேத் தேடிக் கொண்டு வந்தார். மகள் தந்தையின் தாள் மலர் மீது வீழ்ந்து கண்ணீர் சிந்தினுள். "அம்மா! சர்மிஷ்டை இந்தக் கொடுமையை உனக்குச் செய்ய, அவளுக்கு நீ என்ன பிழை செய்தாய்? சொல்" என்று தந்தை கேட்டார். "அப்பா, என்னுடைய உடையை நீ உடுக்கலாமா?" என்று தான் நான் கேட்டேன். அதற்கு அவள் துதிப்பவரும், யாசிப்பவரும்,கையேந்துகின்றவரும் ஆகிய ஒருவருடைய மகள் என்று, என்னை நிந்தித்தாள். பலமுறை இப்படியே கூறினுள். நான் அதனைக் கேட்டும் கோபிக்கவில்லை. பொறுத்திருந்த என்னைக் கிணற்றில் தள்ளினுள். இது நியாயமா?" என்ருள் தேவயானி.

சுக்கிராச்சாரியார் "அருந்தவச் செல்வியே! வருந்தாதே; நீ துதிக்கின்றவன் புதல்வியன்று; துதிக்கப்படுகின்றவருடைய புதல்வி. விருஷபர்வாவுக்கே இது தெரியும். இந்திரனுக்கும் நகுஷ குமாரனுகிய யயாதிக்கும் தெரியும். சிவபெருமான் தந்ததும் ஒப்பற்றதுமாகிய சஞ்சீவினி வித்தையை நான் அறிந்தவன். அதனுல் இறந்தவரை எழுப்புவேன். இந்த வித்தை வியாழனுக்கும் கூடத் தெரியாது. என்னுடைய பெருமையை நானே சொல்லக் கூடாது. மழைக்கு நான் அதி தேவதை; உலகை வளர்க்கின்றேன். அறிவில்லாத சர்மிஷ்டை சொன்னதனுல் உன் பெருமை குறைந்து போகாது. நமக்குப் பொறுமை தான் சிறந்தது. வெறும் கடிவாளத்தைப் பிடிக்கின்றவன் உண்மையான சாரதியன்று. கோபமான குதிரையை நிதானம் என்ற கடிவாளத்தால் பிடித்து அடக்குகின்றவனே உண்மையான சாரதி; சினத்தை வென்றவனே உலகத்தை யெல்லாம் வென்றவன். நூருண்டு ஒவ்வொரு மாதமும் வேள்வி செய்தவனைவிட, எதற்கும் சீற்றம் அடையாதவன் சிறந்தவன். ஆசையும் கோபமும் தவத்தையழிக்கும். ஆதலால் நீ சினத்தை விடுத்து வா" என்ருர்.

அதற்குத்தேவயானி, "தந்தையே! நான் சிறு பெண்ணுக இருந்தாலும், அறத்தின் நுட்பங்களே அறிந்திருக்கின்றேன். பொறுமைக்கும் நிந்தனைக்கும் உள்ள பலாபலன்களே அறிவேன். மானம் வானத்திலும் பெரியது. நம்மை மதியாமல் நிந்தித்தவர் அருகில் வாழ்வது மானமுடைமை ஆகாது. சீடர்கள் தமது தருமத்தைவிட்டபொழுது, அங்கிருப்பது தன்மானம் ஆகாது. என்னை நிந்தித்தால் நான் பொறுத்துக் கொள்வேன். நான் வணங்குகின்ற—இல்லை—உலகமே வணங்குகின்ற, என் முன்னறி தெய்வமாகிய என் தந்தையை நிந்தித்தால் அதை நான் பொறுக்க மாட்டேன். கனல் கட்டையை எரிப்பது போல், அவள் சொன்ன சொல் என் நெஞ்சை எரிக்கின்றது. மதியாதார் மனையில் வசிப்பதைவிட இழிவானது மூன்று உலகங்களிலும் இல்லை. ஆயுதத்தால் வெட்டிய புண் ஆறும். சொல்லினுல் உண்டான புண் ஆருது. தீயினுல் சுட்ட புண்ணும் ஆறும். வாயினுல் சுட்டபுண் ஆருது" என்ருள்.

சுக்கிரர், விருஷ பர்வாவின் அருகிற் சென்று கோபத்துடன் கூறுகின்ருர். "மன்னனே! ஒருவனுக்குத் தான் செய்த பாவம் பசுவைப்போல் உடனே பலன் தருவதில்லை. உரிய காலத்தில் வந்து செய்தவனை அல்லல்படுத்தும். ஒழுக்கத்துடன் என்பால் தொண்டு புரிந்து கொண்டிருந்த உத்தமமான கசனைக் கொல்வித்தாய். தேவயானியைச் சர்மிஷ்டை கொடும் சொற்களால் வைது கிணற்றில் தள்ளினுள். ஆதலால் என் மகள் இங்கே இருக்க விரும்பவில்லை. அவளைப் பிரிந்து நான் இருக்க முடியாது. நீ கவலைப் படாதே. நான் செல்கிறேன்" என்ருர்.

விருஷ பர்வா சுக்கிரருடைய திருவடியில் வீழ்ந்து கூறுவான். "சர்மிஷ்டை செய்த செயலுக்கு நான் காரணனன்று. அவள் அறியாமையால் செய்துவிட்டாள். தாங்கள் எங்களைப் பிரிவீராயின் நான் என் சுற்றத்தாருடன் நெருப்பிலாவது கடலிலாவது வீழ்ந்து மாண்டுபோவேன்" என்றான்.

பிருகுவின் மைந்தரான சுக்கிரர், "அசுரர்களே! நீங்கள் கடலில் விழுங்கள், அல்லது திசைகளின் எல்லைக்கு ஓடுங்கள். என் பெண்ணின் துயரை என்னால் தாங்க முடியாது. அவள் எனக்கு உயிர். அவளை நீங்கள் வெறுத்தால் நான் இங்கு உண்மையாக இருக்கமாட்டேன்" என்றார்.

விருஷ பர்வா, தன் சுற்றத்தாருடன் தேவயானியிடம் சென்று அவளுடைய கால்மீது வீழ்ந்து "அம்மா! உன் பிதா என்னால் துதிக்கப் பெறுகின்றவர். தயை செய்து மன்னிப்பாய். உனக்கு என்ன வேண்டுமானாலும் தருவேன்" என்றான்.

தேவயானி "ஆயிரம் கன்னிகைகளுடன் சர்மிஷ்டை எனக்கு வேலைக்காரியாக இருக்கவேண்டும். என் பிதா என்னை எங்கே தருகின்றாரோ அங்கே அவளும்என் பின்னே வரவேண்டும்" என்றாள்.

விருஷ பர்வா "ஒரு குலத்துக்காக ஒருவனை விடவேண்டும். ஒரு கிராமத்துக்காக ஒரு குலத்தை விடவேண்டும். ஒரு தேசத்துக்காக ஒரு கிராமத்தை விடவேண்டும். தனக்காகப் பூமியையே விட்டு விடவேண்டும் (தன் ஆன்மாவின் நன்மைக்காக எல்லாப் பற்றுக்களையும் விட்டுவிடவேண்டும்)" என்று கூறி மகளை அழைத்தான். அவன் பல்லக்கில் ஏறி வந்தாள்.

"மகளே! நீ உன் ஆயிரம் பணிப்பெண்களுடன் தேவயானிக்குப் பணி செய். உன்னை இவளுக்குத் தந்துவிட்டேன்" என்றான் அரசன். சர்மிஷ்டை "நல்லது" என்று, "அம்மா! தேவயானி! இனி நான் ஆயிரம் பெண்களுடன் உனக்கு அடிமை" என்றாள். "நான் உனக்குத் துதிப்பவன்–யாசிப்பவன் - வாங்குகின்றவனின் பெண்ணல்லவா? துதிக்கப்படுகின்றவன் பெண்ணாகிய நீ, எனக்கு அடிமையாகலாமா?" என்றாள் தேவயானி. சர்மிஷ்டை பணிந்து,

"அம்மா! என் தந்தைக்கும், என் சுற்றத்துக்கும் ஆசாரியரே கதி. ஆதலால் என்னை மன்னிக்கவேண்டும்" என்றாள். தேவயானி சினம் ஆறித் தந்தையுடன் நகரஞ் சேர்ந்தாள். அன்று முதல் சர்மிஷ்டை தேவயானிக்குப் பணிபுரிந்து வந்தாள். சுக்கிரர் அசுரர்கட்கு நன்மை செய்து வந்தார்.

நீண்ட காலத்துக்குப் பின் தேவயானி, சர்மிஷ்டையுடனும் ஏனைய தாதிகளுடனும் முன் சென்ற, அந்த வனத்துக்குச் சென்றாள். ஆடியும் பாடியும் தேனைப் பருகியும் மலர்களைச் சூடியும் மகிழ்ந்து உலாவினாள். யயாதி என்ற மன்னன் வேட்டையாடி இளைத்து நீரை விரும்பித் தற்செயலாக அங்கு வந்தான். எல்லா வகையான மணிகளையும் அணிந்து ஆசனத்தில் அமர்ந்துள்ள தேவயானியையும், சற்றுத்தாழ்ந்த ஆசனத்தில் அமர்ந்து அவளுடைய பாதத்தைப் பிடித்துக் கொண்டிருந்த சர்மிஷ்டையையும் பார்த்தான்.

மன்னனைக்கண்டு அவர்கள் நாணி ஒரு புறம் ஒதுங்கி நின்றார்கள். "நீங்கள் யார்?" என்று மன்னன் கேட்டான். தேவயானி "வேந்தே! யான் சுக்கிரருடைய புதல்வி; என் பேர் தேவயானி; இவள் அசுரமன்னர் விருஷபர்வாவின் புதல்வி சர்மிஷ்டை, என்னுடைய தாதி" என்றாள். யயாதி "இவளைப்போன்ற அழகும்தகைமையும் உள்ள ஒரு பெண்ணைத் தேவ கந்தர்வ மானுட உலகில் யான் கண்டதேயில்லை. இவள் உனக்குத் தாதியா? உன்னிலும் பன்மடங்கு சுந்தரமுள்ள இவள் உனக்குத் தாதியானது ஏன்?" என்றான்.

"வேந்தர் பெருமானே! எல்லாம் விதி செய்யும் விளையாடல். நீர் முன்னர் என் கரத்தைப் பற்றினீர். அதனால் நீரே என் கணவர்" என்றாள் தேவயானி. அதற்கு யயாதி, "மாதரசே! குலமுறை தவறக் கூடாது. அரசனாகிய நான் அந்தணர்

மகளை விரும்புவது முறையன்று" என்று கூறினன். அவன் மனம் சர்மிஷ்டையை விரும்பியது.

தேவயானி, தன் தந்தையை அழைத்தாள். சுக்கிரரை யயாதி அடிபணிந்தான். சுக்கிரர் யயாதியைப் பார்த்து "அரசே! இவள் உன்னை விரும்புகின்ருள். முன்னும் இவளுடைய கரத்தைப் பற்றினய். கசனுடைய வசனமும் அப்படி அமைந்துளது. நான் இவளை உனக்கு மனைவியாகத் தருகின்றேன். நீ மறுக்காமல் ஏற்றுக்கொள்" என்று திருமணஞ் செய்து கொடுத்தார். 'யயாதி! இந்தச் சர்மிஷ்டை. என் மகளுடன் உன் இல்லம் வருவாள். இவளை நன்கு ஆதரிப்பாய். இவளை நீ தீண்டாதே" என்று கூறினர்.

யயாதி விடை பெற்றுத் தன் நகரஞ் சேர்ந்தான். தேவயானி அரசமாளிகையில் அமர்ந்தாள். தேவயானியின் விருப்பத்தின்படி சர்மிஷ்டையை அசோக வனிகை என்னும் நந்தவனத்தில் ஒரு மாளிகை கட்டி அதில் இருத்தினன். அவளுக்கு அன்னமும் ஆடையும் குறைவின்றிக் கொடுத்தான். தேவயானி யயாதியுடன் இனிது வாழ்ந்தாள். அவள் அதிக மகிழ்ச்சியுடன் ஆடியும் பாடியும் கூடியும்பொழுது போக்கினள். கருவுற்று "யது" என்ற மகனைப் பெற்ருள்.

சர்மிஷ்டை, ஒரு நாள் அசோக மரத்தின் கீழ்நின்றுகொண்டு "அசோகமே! என் சோகம் நீங்குமா! ஏ மனமே! நீ இளம் பருவத்தில் கணவனுடன் கூடிவாழ வேண்டாமா? யயாதிதான் கணவராகத் தகுதியுள்ளவர். அவரையே வரிக்கின்றேன். என் இளமை நலம் அவமே கழிகின்றது. மன்னவர் என்னை விரும்புவாரா? அவர் இங்கு வருவாரா?" என்று மிகுந்த சிந்தனையுடன் வாடி நின்ருள்.

தற்செயலாக யயாதி அங்கு வந்தான். அவனைச் சர்மிஷ்டை பணிந்து நாணத்துடன் கூறுவாள். "கருணை மன்னரே! நான் உமது வீட்டில் இருப்பவள். ஒழுக்கந் தவருதவள். என் இளமை நலங்கெடாமல் என்னை நீர் அடைவது முறைமை" என்ருள்.

யயாதி "மாதர் திலகமே! உன்னைக் கண்டது முதல் என் உள்ளத்தில் நீயிருக்கின்ருய். உன்னைத் தீண்டுதல் கூடாது என்று சுக்கிரர் என்னிடம் கூறியுள்ளார். அது பற்றித்தான் சிந்திக்கின்றேன்" என்ருன்.

சர்மிஷ்டை "ஏளனத்துக்காகவும், கல்யாண காலத்திலும், சயன காலத்திலும், பெண்களிடத்திலும், உயிர்க்குத் தீங்கு நேரிடும் போதும், உடைமைகள் பறிபோகின்றபோதும், பொய் கூறலாம் என்று கேள்விப் பட்டிருக்கின்றேன். பொய்யால் பிறருக்குத் தீங்கு வரக்கூடாது. அதனுல் என்னை நீர் தீண்டுவது பாவம் இல்லை" என்ருள். யயாதி "ஆரணங்கே நான் பொய் சொன்னதேயில்லை; பொய் என்னைக் கெடுக்கும்" என்ருன். சர்மிஷ்டை "வேந்தர் பெருமானே! யார் எதைக் கேட்டாலும் தடையின்றித் தருவேன் என்று நீர் தினம் மும்முறை பறையடித்துக் கூறி வருகின்றீர். அந்தச் சொல் பொய்யாகக் கூடாது. நான் தங்களிடம் ஒரு பொருளை யாசிக்கின்றேன். வேண்டுவார் வேண்டியதை வழங்கும் வள்ளலாகிய நீர் கொடும்" என்று கையேந்தினள். யயாதி, "இனியவளே! உனக்கு நான் எதைத்தர வேண்டும்? கேள் தருவேன்" என்ருன். சர்மிஷ்டை "ஒழுக்கம் தவருத எனக்குப் புத்திரதானம் வேண்டும். புத்திரனைவிடச் சிறந்த பொருள் இல்லை; அதைக் கொடும்" என்ருள்.

யயாதி அவள் சொல்லில் கட்டுண்டு, வேறு வழியின்றி அவளை மருவினன். இவ்வாறு பலமுறை அவர்கள் சந்தித்து மகிழ்ந்தார்கள். சர்மிஷ்டை தேவகுமாரனைப் போன்ற ஒரு புதல்வனைப் பெற்ருள்.

தேவயானி அதையறிந்து கோபத்துடன் சர்மிஷ்டையைப் பார்த்து "உனக்குப் பிள்ளை எவ்வாறு பிறந்தது?" என்று கேட்டாள். "அம்மா! நான் பிழை செய்யவில்லை. ஒரு முனிவர் தந்த மந்திரத்தினுல்

புத்திர வரம் பெற விரும்பினேன். அம் முனிவருடைய அருளினால் இம்மகவு தோன்றியது" என்றாள். தேவயானி சினந்தணிந்தாள். பின்னர் தேவயானி துர்வசு என்ற மகனைப் பெற்றாள். சர்மிஷ்டை துருஷ்யு, அனு, பூரு என்ற மூன்று சிறந்த புத்திரர்களைப் பெற்றாள்.

யயாதிக்குத் தேவயானியிடம்மனம்பற்ற வில்லை. அவனுக்குத் தேவயானி இரும்பாகவும், சர்மிஷ்டை கரும்பாகவும் இருந்தனர். ஒருநாள் தேவயானி மன்னனுடன் அமர்ந்திருக்கும்போது, சர்மிஷ்டையின் புதல்வர்கள் அங்கு விளையாடச் சென்றார் கள். அவர்களது உருவம் மன்னவன் உருவத்தை ஒத்திருந்தது. தேவயானி ஐயுற்றாள். அம்மைந்தர்களை அழைத்து "உங்கள் தாய் தந்தையர் யார்?" என்று வினவினாள். அக்குழந்தைகள் "தாய் சர்மிஷ்டை, தந்தை இவர்" என்று காட்டி னார்கள். தேவயானி பெருஞ் சினம் அடைந்தாள். யயாதியை வெறுத்தாள். யயாதி அவளைப் பலமுறை வேண்டியும் அவள் ஆறுதல் அடைந்திலள். தன் தந்தையிடம் சென்று நடந்ததை நவின்றாள்.

சுக்கிரர் சினந்து வந்து, யயாதியைப் பார்த்து "உன்னை மூப்புவந்து மூடிக் கொள்ளும்" என்று சபித்தார். உடனே யயாதி கிழப்பருவத்தை யடைந்தான். அவரைத் தொழுது, சர்மிஷ்டைக்கும் தனக்கும் நடந்த சம்வாதத்தைக்கூறி, "அவள் புத்திரதானம் கேட்டாள். நான் தர இசைந்தேன்" என்றான். சுக்கிரர் சினந்தணிந்து, "மூப்பினை வேறு ஒருவனிடம்மாற்றிக் கொள்ள அனுமதிக்கின்றேன்" என்றார். "பெருமானே! மாற்றிக் கொள்ளும் மகனுக்கே என் அரசு உரியதாகும்" என்றான் யயாதி. அதற்குச் சுக்கிரர் இசைந்தருளினார்.

(தொடரும்)

---

## தமிழின் தனிச்சிறப்புகள்

செய்யுள் நடையிற் கிரேக்கத்திற் சிறந்த நயமும் திருத்தமும்மிக்(கு),
எய்தற் கருநற் கலைவிரிவில் இலத்தீ னத்தின் மிகமேலாய்,
உய்யும் நிறைவால் ஆற்றலினால் உயர்ந்த செருமன் ஆங்கிலத்தின்
மெய்யே ஓங்கித், தமிழ்மொழிதான் விளங்கித் திகழும்! தமிழ்வெல்க! *(1)*

கருத்துச் சிறப்பில், ஆற்றலினில், கலைகள் மலிந்த கவிவளத்தில்,
சுருக்கத் திறனில், திட்பநுட்பம் துதைந்து விளங்கும் அறிவறத்தில்,
ஒருக்க உணர்வும் உரைவிளைவும் ஒன்றும் உயர்வில், தமிழ்மொழிபோல்
பெருக்கம் அமைந்து பிறங்குமொழி பிறிதொன் றில்லை! தமிழ்வாழ்க! *(2)*

எண்ணில் மொழிகள் வழக்கிழந்தே, எவரோ சிலர்தாம் பயிலநிற்கக்
கண்ணில் விளங்கு கருமணிபோல் கனிவிற் போற்றி மக்கள்பலர்
மண்ணில் இன்றும் வழங்கிவர, மாறு வளத்தில், தொன்றுதொட்டே
திண்ணி தாகத் தமிழ்மொழிதான் சிறந்து திகழும்! தமிழ்போற்றி! *(3)*

—ஆசிரியர்.

---

(1) " It is not perhaps extravagant to say that in its poetic form, the Tamil is more polished and exact than the **Greek**, and in both dialects with its borrowed treasures, more copious than **Latin**. In its fullness and force it resembles **English** and **German** more than any other living language." —Dr. WINSLOW.

(2) " Perhaps no language combines greater force with equal brevity and it may be asserted that no human speech is more close and philosophic in its expression as an exponent of the mind. The sequence of things, of thought and action and its results, is always maintained inviolate." —PERCIVAL.

(3) " Tamil is, perhaps, the only example of an ancient classical tongue, which has survived as a spoken language, for more than 2500 years, with its basic structure, almost unchanged." —**Encyclopaedia of Brittanica.**

# இறைவனும் உயிரும்

'சித்தாந்த வித்தகர்'
திரு. டாக்டர். வ. ஆ. தேவசேனபதி, M.A., Ph.D.,
தத்துவத் துறைத் துணைப்பேராசிரியர்.
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை-5.

இறைவன், உயிர், தளை என்னும் முப் பொருள் உண்மையைச் சைவ சித்தாந்தம் வற்புறுத்துகிறது. இவற்றுள் முதலிரண் டும் அறிவுடையவை; பின்னது அறிவற் றது. எனவே, இறைவனும் தளையும், உயிரும் தளையும் வேருயிருக்கக் கூடும். அறிவுப் பொருள்களான இறைவனும் உயிரும் எவ்வாறு வேறுபடலாம்? கட்டு நிலையில் வேறுபடுகின்றன எனினும், வீட்டு நிலையில் அவை ஒன்றேயாயிருப்பதற்குத் தடை யாது? என்னும் கேள்விகள் எழ லாம். சைவ சித்தாந்தம் இக்கேள்வி களுக்குக் கூறும் விடையைப் பார்ப்போம்.

இதற்கிடையில், உள்பொருள் ஒன்றே என்னும் மறைமொழி நினைவுக்கு வரலாம். ஒன்று எனில் உயிர்களைப் பன்மையில் எவ்வாறு கொள்ளமுடியும்? உள்பொருள் ஒன்றென மறைகள் முழங்குவது உண்மை தான். ஆயின் அவை, இறைவன் ஒன்று என்னும் கருத்தில் 'ஒன்று' என்று கூறு கின்றன. மறைகளைப்பின்பற்றி நாம், ஒன்று என்று கூறும் உயிர், இறைவனன்று; தளை யால் பிணிப்புண்டது. இவ்வாறு பிணிப் புண்ட உயிர்களும் பல. அகரம் என்னும் முதன்மையான எழுத்தையின்றி ஏனைய எழுத்துக்கள் அமையாவாறு போல, இறை வனையின்றி உயிர்களும் அமையா. இவ் வுண்மையை மெய்கண்டார் மிகத் தெளி வாகப் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார்.

ஒன்றென்ற தொன்றேகாண்; ஒன்றே பதி; பசுவாம்
ஒன்றென்ற நீ, பாசத் தோடுளைகாண்;—ஒன்றின்ருல்
அக்கரங்கள் இன்ரும்; அகர உயிரின்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு.

இனி உயிர் தளையுற்றிருப்பது உண்மை தானு என்னும் கேள்வி எழலாம். அறியா மையால் உயிர் தளையுற்றிருப்பதுபோலக் கருதிக்கொள்ளக்கூடும். அறியாமை நீங் கினல் தளை இல்லையென்பது தெளிவாகும். உண்மையில் உயிர் தளை பட்டிருக்கக் கூடுமெனில், ஒரு கால் தளை நீங்கினலும், மீண்டும் தளை ஏற்படக்கூடும். எனவே, முடிவான உண்மை; உயிர் ஒருபோதும் தளைப்பட்டிருப்பதில்லைஎன்பதுதான் என்று முடிவு செய்யலாம். ஆனல், இம்முடிவு ஆன்மிய வாழ்விற்குப் பொருந்துவதாக உளதா என்று பார்க்கவேண்டும்.

மெய்யுணர்வு ஆராய்ச்சியில் ஈடுபடாத வரையில் சிக்கல் ஒன்றுமில்லை. ஆராய்ச்சி தொடங்கியவுடன் பலவகையான சிக்கல் கள் எழுகின்றன, உடலோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தாலும் உயிர் உடலன்று என்னும் உண்மை புலப்பட்ட வுடன், உயிரின் வரலாறு யாது? அதன் தன்மை யாது? என்றெல்லாம் கேட்கத் தோன்றுகிறது. தன்னுடைய அறிவும் ஆற்றலும் விருப்பங்களும் தடைப்பட்டிருப் பதாக உயிர் உணர்கிறது. ஏதோ ஒரு வகையான கறை அல்லது மாசு தன்னைப் பற்றிக் கொண்டிருப்பதாகவும் உயிர் உணர்கிறது. 'பொத்தின நோயிதன் பொருளுணர்ந்தேன், போய்த் தொழு வேன்' என்று சுந்தரர் கூறுவதை இங்கே நினைவு கொள்ளலாம். மாசு அல்லது நோய் செயற்கைதான். ஆகையால் இம் மாசு அல்லது நோய் நீங்கி, இயற்கை நிலை யாகிய தூய்மை அல்லது நலத்திற்கு மீளும் வரையில், உயிர் ஓய்வு கொள்வதற்

கில்லை. இதற்கான வழிவகைகளை மேற் கொண்டாலும் இறைவன் திருவருளின்றி வெற்றி காணமுடியாது. எனவே, அவன ருளால் தொடங்கப்படும் முயற்சி, அவன ருளாலேயே முற்றுபெற வேண்டியதா கிறது. இம்முயற்சி கைகூடுவதற்குப் பல பிறவிகள் தேவைப்படலாம். இவ்வுண்மை கள் அனைத்தும் வெறும் அறிவு வழி நின்று பெறக்கூடியவை அல்ல. இறைவனரு ளால் மட்டுமே விளங்கக் கூடியவை; இறைவனருளால் சமயச் சான்றோர்களுக் குப் புலப்பட்டவை. எனவேதான், அரு ணந்தி சிவம், மறைகளாலும் உள்ளத் தாலும் உரையாலும் இறைவனை உணர முடியாது என்று கூறியபின், இறை வனருள் வாய்க்குமானல், இவற்ருலும் அவனை உணர முடியுமென்கிருர்.

மாசு நீங்கித் தூய்மை யடைந்த உயிர், தன் இயற்கை நிலை மாசற்றதென்பதற்காக மாசு படிந்திருந்த செயற்கை நிலையை மறைப்பதோ மறுப்பதோ ஆன்மிய வர லாற்றுக்குப் பொருந்தாத செயலாகும். இறைவனருளின்றி அது மீண்டும் தன் இயற்கையான தூய்மையை அடைந் திருக்க முடியாது. எனவே, அவனருளால் தான் பெற்ற நன்மையை மறப்பது, உய்தி யில்லாத பிழையாகும் என்று மெய்கண் டார் வற்புறுத்துகிருர்.

இனி, அறிவுப் பொருள்களாயினும், இறைவனும் உயிரும் எவ்வாறு வேறுபடு கின்றன என்பதற்கு, அருணந்தி சிவம் தரும் விளக்கம், இருள் — மருள் ஆகிய நிலைகளிலிருந்து, அருள் நிலைக்கு உயிர் செல்லும் ஆன்மிய வளர்ச்சியை மைய மாகக் கொண்டுள்ளது.

உயிர் அறிவுடைய பொருளெனினும் அருளை நாடி நிற்பது; பிறப்பு இறப்புக் களில் படிவது; அறிவித்தால் அறிவது. ஆதலின், இறைவனும் உயிரும் அணைந் தாலும், அவை ஒரே பொருளாகி விடாமல் தம்முள் நெருங்கிய தொடர்புடையனவாக இருப்பவை. இத்தொடர்பு பிரிக்கமுடியா தது. கட்டுநிலையில் உயிர் இதனை உணர் வதில்லை. கட்டு நீங்கியவுடன், உயிர் எதையும் யாரையும் இறைவனுகவே பார்க் கிறது. 'பரமே பார்த்திருப்பர், பதார்த் தங்கள் பாரார்' என்பது அருணந்தி சிவத்தின் வாக்கு.

சிவன்சீவன் என்றிரண்டும் சித்து;
ஒன்ரும் என்னில்,
சிவன் அருட் சித்து; இவன் அருளைச்
சேரும்சித்து; அவன்தான்
பவம்கேடு புத்திமுத்தி பண்ணும்
சித்து; அவற்றிற்
படியும் சித்து, அறிவிக்கப்படும்
சித்தும் இவன்தான்;
அவன்தானே அறியும் சித்து;
ஆதலினல் இரண்டும்
அணைந்தாலும் ஒன்ருகாது;
அநந்நியமாய் இருக்கும்;
இவன்தானும் புத்தியும் சித்து;
இவனுமோ புத்தி;
இது அசித்து ஒன்றிடில், அவனுக்கு
இவனும் அசித்தாமே''

—சிவஞான சித்தியார்.

'அத்வைதம்' என்னும் சொல்லுக்குச் சிவஞான முனிவர் 'வேறன்மை' என்று அன்மைப் பொருள் கொள்வதைப்போல, 'அநந்நியம்' என்பதையும் வேறன்மை யாகவே கொள்ளுதல் ஏற்புடைத்து. *

## செய்திச் சுருக்கம்

**பன்னிரு திருமுறை விழா :** சென்னைத் திருமயிலைக் கபாலீசுவரர் கோயிலில் 7-8-68 முதல் 18—8—68 வரை சிறப்புற நடைபெற்றது. திருவாளர்கள் கி. வா. ஜகந்நாதன் M.A., கயப்பாக்கம் சோமசுந்தரஞ் செட்டியார், ப. இராமநாத பிள்ளை, நெல்லை இராமலிங்கம், அம்பை சங்கரனர், திருமதி அன்புக்கொடி அம்மையார், சுந்தரமூர்த்தி புராணிகர், சா. கணேசன் M.L.A., அ. ச. ஞானசம்பந்தம் M.A., அகில இந்திய வானெலி நிலையம் கே. சி. தியாகராசன், திருமதி காஞ்சனமாலை அம்மையார், சிங்காரவேலு முதலியார், ச. சிவகுமார் M.A., 'திருக்கோயில்' ஆசிரியர் ந. ரா. முருகவேள், M.A., M.O.L. திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம், B.A.B.L. ஆகிய அறிஞர் பெருமக்கள் பலர், சொற்பொழிவாற்றிச் சிறப்பித்தனர்.

—ஆசிரியர்.

# ஸ்ரீராமாயண ரசப்பிரவாகம்

மகாவித்துவான். ஸ்ரீமத். பி.ப. அண்ணங்கராசாரிய சுவாமிகள்

(காஞ்சிபுரம்.)

இராமபிரானின் அழகு :

ஸ்ரீமத் வான்மீகி ராமாயணத்தில், வான்மீகி நாரத சம்வாதத்தில்,'சமர்த்தன் யார்?' என்கிற பத்தாவது வினு, முன்பு விவரிக்கப்பட்டது. இனி 'ஏகப்பிரிய தரிசனன் யார்? என்கிற பதினேராவது வினு, விவரிக்கப்படுகின்றது. எவ்வளவு காலம் பார்த்துக்கொண்டிருந்தாலும் தெவிட்டாமல் இனிமையே செல்லும்படியான பார்வையை உடையவன் யாவன்? என்பது, இந்த வினுவின் கருத்து. சிறந்த அழகுடையவன் யாவன்? என்று வினவியவாறு. உலகில் அழகு மிகுந்த மனிதர்கள் பலரை நாம் பார்ப்பதுண்டு. ஆனல் இரண்டொருநாள் பார்த்தவாறே பழகிப்போய் வெறுப்புத் தட்டிவிடுவது இயல்பு. இரண்டொருநாள் மாத்திரமே, விரும்பிப் பார்ப்பது என்கிற அழகும் கவர்ச்சியும் இருக்கும். நாளடைவில் அதுமாறிப் போய்விடும். இராமபிரானுடைய எழில் இத்தகையதொன்றன்று.

"எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டு
ஊழி ஊழிதொறும்
அப்பொழுதைக்கு அப்பொழுது என்
ஆரா அமுதமே"

என்று, நம்மாழ்வார் அருளிச் செய்தபடி ஊழிதோறு ஊழிஓவாது பார்த்துக் கொண்டிருந்தாலும் அபூர்வக் கட்சியாகவே இருக்கும்.

இராம நாமம் :

இப்படிப்பட்ட அழகு கொண்டிருந்தது கண்டே, வசிட்ட பகவான் இராமன் என்று திருநாமம் சாத்தினன். இராமன் என்கிற சொல்லானது ரமயதி என்கிற விற்பத்தியினுல் தேறும் வடசொல். தன்னுடைய அழகைக் காட்டி ஓவாது களிக்கச் செய்பவன் என்பது தேறின கருத்தாம். இராமனது வடிவழகில் யார் யார் எப்படி ஈடுபட்டிருக்கின்ருர்கள் என்பதை, உள்ளவாறுவிவரித்துக்காட்டப்புகுந்தால் மிகவிரிவாகும். சாரமாகச் சில இடங்களைமட்டுமே எடுத்துக் காட்டுவோம். அதற்குமுன் இராமனின் அழகைப்பற்றி வான்மீகி முனிவனின் வாக்கில் வெளிவந்திருப்பதைச் சிறிது பார்ப்போம்.

தசரதன்

அயோத்தியா காண்டத்தில் இராமனுக்கு யுவராச பட்டாபிடேகம்செய்ய நினைத்த தசரத மன்னவன், இராமனைத் தன்னிடம் வரவழைத்தான். வந்து கொண்டிருக்கிற இராமனை மன்னவன் தூரத்தில் இருந்து பார்க்கும்போது, அவன் உள்ளம் பூரித்தபடியே வான்மீகி பேசுகிருர். (3—28):

"சந்த்ர காந்தாநநம் ராமம்
அதீவ ப்ரிய தர்சநம்,
ரூப ஔதார்ய குணை; பும்ஸாம்
த்ருஷ்டி சித்தாபஹாரிணம்"
"நததர்ப்ப ஸமாயாந்தம்
பச்யமாநோ நராதிப;"

இதில் 'சந்திரகாந்த ஆநநம்' என்பதற்கு, சந்திரன் போல் அழகிய திருமுக மண்டலத்தை உடையவன் என்று பொருள் கொள்வர் சிலர். சந்திரனைக் காட்டிலும் அழகிய திருமுகத்தை உடையவன் என்பது முனிவன் கருதிய பொருளாம். "கச்சைகப் பிரியதர்சந:"

என்கிற வினா, முனிவனது மனத்தில் ஊறிக்கிடப்பதினாலே, இங்கு 'அதீவ ப்ரிய தர்சநம்:' என்னும் வாசகம் வெளி வந்தது. இதற்கு மேல் 'ரூப ஔதார்ய குணை; பும்ஸாம் த்ருஷ்டி சித்தாப ஹாரிணம்' என்றது மிக அற்புதமான சொல். இராமன் வடிவழகு முதலிய குணங் களினால் எல்லாருடைய கண்ணையும் நெஞ்சையும் கவருபவன் என்று சொல்ல வேண்டி இருக்க, முனிவன் அப்படி சொல்லாமல், 'பும்ஸாம்' (ஆண்களுக்கு) என்று விசேடித்துக் கூறியுள்ளான். ஆண்களுக்கு மனமகிழ்ச்சியைத் தரு பவனே ஒழியப் பெண்களுக்கு மனமகிழ்ச்சி யினை உண்டாக்குபவன் அல்லன் போலும்! என்று சிலர் நினைப்பர், அது பிசகு.

தண்டாபூபிகா நியாயம் ;

வடமொழி நூலார் 'தண்டா பூபிகா நியாயம்' என்று ஒரு நியாயம் கூறுவர். அதாவது; ஒருகிழவர் தம்முடைய தடி ஒன்றில் வடையை மாட்டி வைத்து இரவில் உறங்கி, காலை எழுந்து வடை உண்பதற் காகத் தடியைத் தேடினாராம்; தடி எலி யினால் உட்கொள்ளப்பட்டது என்று அறிந்து அதனைத் தம்முடைய தேவி யாரிடம் சொல்ல, அதுகேட்ட தேவியார் 'தடிபோனால் போகட்டும், வடை இருக்கிறதா?' என்று கேட்க, அதற்குக் கிழவர் விடை கூறினர்: 'அடி முழுமூடமே' தடியே எலியால் விழுங்கப்பட்டது என்றால், வடையைப் பற்றிக் கேட்பதும் உண்டா?' என்று. இதனையே வடமொழிப் புலவர்கள் தண்டா பூபிகா நியாயம் என்கின்றனர். இது கைமுதிக நியாயம் என்றும் வழங்கப்பெறும்.

மேலே எடுத்துக்காட்டிய வான்மீகியின் சுலோகம் இந்த நியாயத்தை நினைவூட்டு வதாகத் தோன்றி உள்ளது. இராம னுடைய வடிவழகு ஆண்களின் கண்ணை யும் நெஞ்சையும் கவர்கின்ற தென்றால், பெண்களின் கண்ணையும் நெஞ்சையும் கவர்கின்றது என்பது சொல்லவேணு மோ? உலகில் ஆண்கள் எவ்வளவு சுந்தர புருடர்களாய் இருந்தாலும், அவர் களுடைய வடிவத்தை ஆண்கள் ஒரு பொருளாக மதியார்கள். பெண்களின் அழைக்க கண்டு ஆண்கள் மோகிப்பதும், ஆண்களின் அழகைக் கண்டு பெண்கள் மோகிப்பதுமே, உலக இயல்பாகும். இங்ஙனம் அன்றிப் பெண்களின் அழகைக் கண்டு பெண்கள் மோகிப்பதும், ஆண் களின் அழகைக்கண்டு ஆண்கள் மோகிப் பதும் மேட்டுமடையே ஆகும். அப்படி மோகித்ததாகக் கூறும் இடம் கண்டால், அவ்வழகு உலக இயல்பிற்கு அப்பாற் பட்டது என்பதே தெரிவிக்கப்பட்டதாகும்.

துரௌபதி விராட நகரத்தில் வாசம் செய்த காலத்து, அவள் நீராடுகையில் அவளது வடிவழகைக் கண்ட மாதர்கள் மிகவும் மோகித்தார்கள் என்று, மகா பாரதத்தில் கூறப்பட்டுள்ளது. அதனால் அவளது அழகு உலகத்தில் சிறந்தது என்பதே தெரிவிக்கப்பட்டதாகின்றது. அதுபோலவே இங்கு 'இராமபிரானது வடிவழகு ஆண்களை மயக்குகின்றது என்று கூறுகின்ற வான்மீகி முனிவர், இராமனது வடிவழகில் ஈடுபடாதார் இல்லை என்பதை யே கூறினர் ஆவர்.

"கண்ணிற் காணபரேல்
ஆடவர் பெண்மையை அவாவும்
தோளினாய்"
—கம்பராமாயணம்

"வாராகா வாமனனே அரங்கா வட்ட
நேமி வலவா
ராகவா உன் வடிவழகு கண்டால்
மன்மதனும் மடவார் ஆக ஆதரம்
செய்வன்"
—திருவரங்கத் தந்தாதி.

"பெண்டிரும் ஆண்மை வெஃகிப்
பேதுறும் முலையினாள்"
—சீவக சிந்தாமணி.

என்பன போன்ற பல பாசுரங்கள், நினைப் பூட்டத்தகும்.

விசுவாமித்திரர் :

இனி இராமனது வடிவழகில் ஈடுபட்ட வர்களைப் பற்றிச் சிறிது தெரிவிக் கின்றேன். முதலில் விசுவாமித்திர முனி வரை எடுத்துக்கொள்வோம். இவர் தசரத மன்னவர் இடம், இராம லட்சுமணர்களைப் பெற்றுக்கொண்டுபோகையில், சூரியன் மறைந்த அளவில் பிள்ளைகள் உறங்கிப் போயினர். பிறகு பின் மாலையில் இராமனை எழுப்புகின்ற முனிவர் 'கவுசல்யா சுப்ரஜா

ராமா'! என்கிறார். இது இராமபிரானை விளிப்பது. இதற்கு ஆசாரியர்கள் பலவிதமாகப் பொருள் பணிக்கின்றனர். இரண்டு விதம் கேண்மின்: கவுசல்யா என்பதைத் தனிப்பதமாகவும், சுப்ரஜா: என்பதைத் தனிப்பதமாகவும் பிரித்து ஒருபொருள் நிர்வாகம். அவற்றை ஒரே பதமாகவே கூட்டாகக்கொண்டு மற்றொரு நிர்வாகம். ஒரே பதமாகக் கொள்ளுகிற நிர்வாகத்தில் கவுசல்யா தேவியின் நல்ல புதல்வனை இராமனே! என்று அழைத்ததாகத் தேறுகின்றது. தனிப்பதங்களாகப் பிரித்துக் காட்டுகிற நிர்வாகத்தில் 'கவுசல்யா தேவியானவள் நல்ல பிள்ளை பெற்றவள்' என்று சொல்லி முடிப்பதாக ஆகிறது. மேலோடே தொடர்பு இல்லாமல் தனி வாக்கியமாக நிற்கின்றது, 'இராமா! பொழுதுவிடிந்தது. எழுந்திரு' என்று சொல்ல வேண்டிய இந்தச் சந்தர்ப்பத்தில் கவுசல்யையைக்கொண்டாடுவது எதற்காக என்று கேள்வி வரும். இங்கே நம்முடைய பூருவாசாரியர்கள் அருமருந்தன்ன ஒரு விளக்கத்தை அருளிச் செய்கின்றார்கள் காண்மின்: 'முனிவன், உண்ணப்புக்கு வாயை மறப்பாரைப்போலே தான் அதிகரித்த காரியத்தை மறந்து, பெற்ற வயிற்றுக்குப் பட்டம் கட்டுகிறவனாய், ஒரு திருவாட்டி பிள்ளை பெற்றபடி என்னே! என்று கவுசலையாரைக் கொண்டாகிறான்; வடிவழகு படுத்தும்பாடு!' என்று

இதைச் சிறிது விவரிப்போம். இலையில் பிரசாத பணியாரங்களைப் பரிமாறி இருந்தால் உண்பதற்கு உட்கார்ந்தவன் செய்ய வேண்டிய காரியம் என்ன? அவற்றைத் திரட்டி எடுத்து உட்கொள்வதுதானே செய்யவேண்டும். அது செய்யாமல், இந்தப் பணியாரம் யார் செய்தது? எப்படி செய்தது? எது கொண்டு செய்தது? என்று சில விசாரங்கள் செய்து கொண்டு கிடந்தானாகில், அவன் அந்தப் பணியாரத்தின் அமைப்பிலேயே மிகவும் ஈடுபட்டு விட்டான் என்று தெரிந்து கொள்ளலாம் அன்றோ! அதுபோலவே இங்கு விசுவாமித்திர முனிவன் இராமனை எழுப்பி அழைத்துக்கொண்டு போக வேண்டிய காரியம் முதன்மையாக இருக்க, அதை விட்டு இப்படிஅழகிய பிள்ளையைப் பெற்ற கௌசல்யாதேவி என்ன நோன்பு நோற்றாளோ என்று அவளைக் கொண்டாடத் தொடங்கிவிட்டான். இது இராமனது அழகு படுத்தினபாடு என்பது தவிர, வேறு என்ன சொல்லமுடியும்?

மிதிலை மகளிர் :

இராமன் மதுராபுரியில் திருவீதி வலம் வரும் காலத்து, அவனைக் கண்ட மாதர்களின் தன்மையை வருணிக்கின்ற கம்பர்,

தோள்கண்டார் தோளே கண்டார்;
தொடுகழற் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்?
தடக்கை கண்டாரும் அஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கண்ட சமயத்து அன்னான்
உருவுகண் டாரை ஒத்தார்"

என்று கூறுகின்றார். இராமனது ஓர் அவயவத்தின் அழகைக் கண்டவர்கள் மற்றோர் அவயவத்தில் கண் செலுத்த மாட்டாதவர்கள் ஆயினர் என்று சொன்னதினால், இராமனின் திவ்விய மங்கள விக்கிரக சௌந்தர்யம் ஒப்புயர்வற்றது என்று தெரிவிக்கப்பட்டதாயிற்று.

குலசேகராழ்வார் :

இராமனது அழகைத் தசரத மன்னன் அனுபவிக்கும் படியைக் குலசேகர ஆழ்வார் கூறியிருப்பது மிகவும் சிறப்பானது. பெருமாள் திருமொழியில் (9—4) "வா போகு வா இன்னம் வந்தொருகால் கண்டுபோ" என்ற பாசுரம் அமைந்திருக்கும் அழகு பெரிதும் அற்புதம். தசரதன் சுமந்திரன் முதலானோரை அனுப்பி இராமனை வரவழைப்பன். முன்னழகைச் சேவிப்பதில் ஆசையினால் வா என்பன்; முன்னிலும் பின்னழகிய பெருமாள் ஆகையினாலே, இராமனின் பின்னழகைச் சேவிக்கக் கருதிப் போகு என்பன். மறுபடியும் முன்னழகைச் சேவிக்க வேண்டி மீண்டும் வா என்பன். இப்படி மாறி மாறி அழகைச் சேவிக்கப்பெற்றதனாலே பிச்சேறி இன்னம் வந்தொருகால் கண்டு போ என்பன். இப்படி எவ்வளவு பார்த்தும் திருப்தியே பிறக்கவில்லை என்பதையே, 'ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப:' என்று, வான்மீகி கூறிமுடித்தார்.

**சூர்ப்பணகை :**

இதெல்லாம் கிடக்கட்டும்! அழகில் ஈடுபட அறியாத அரண்ய வாசிகளும், இராமனது வடிவழகைக் கண்டு வியந்தனர் என்பதை, ஆரண்ய காண்டம் முதல் சருக்கத்தில் வான்மீகி முனிவர் வியந்து கூறுகின்றார்.

" ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம்
 ஸௌகுமார்யம் சுவேஷதாம்
தத்ருசுர் விஸ்மிதாகாரா
 ராமஸ்ய வநசாரிண: "

என்பது அங்குத் தலையான சுலோகம். இதில் 'வநவாஸின:' என்றும் 'வநசாரிண:' என்றும் பாட பேதம் உள்ளது. ஆடு மாடுகளும் உட்பட வியந்து கண்டனவாம், இராமனது வடிவழகை. இதுதானும் கிடக்கட்டும். மூக்கும் காதும் அறுப்புண்டு கதறி அழுதுகொண்டே கரதூஷணாதிகளுடன் செல்கின்ற சூர்ப்பணகை, 'இரண்டு படுபாவிகள் என்னை இப்பாடு படுத்தினர்' என்று வைய வேண்டிய வாய் கொண்டு சொல்லியிருப்பன பாரீர்:

" தருணௌ ரூபஸம்பந்நௌ
 குசுமாரௌ மஹாபலௌ
புண்டரீக விசாலாக்ஷௌ
 சீரக்ருஷ்ணஜிநம் பரௌ
கந்தர்வ ராஜப்ரதிமௌ
 பார்த்திவவ்ய ஞ்ஜாநாந்விதௌ "

என்று வாயாரச் சொல்லுகிறாள். இராமனிடத்திற் பரமப்பிரீதி கொண்ட அயோத்தியா வாசிகளின் வாக்கிலும் இங்ஙனே வெளிவரக் கண்டதில்லை.

**வாலி :**

வாலியும் இராமபாணம் பட்டுத் தான் முடிந்துபோகும் தருணத்திலே, இராமனோடு தர்க்கம் செய்யும் போதும், 'ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்'! என்று விளிக்கின்றான். நம் விருப்பப்படி அவித்தவித்து அழகுபெற எழுதக் கூடியது ஓவியம்; அவ் ஓவியத்திலும் எழுத வொண்ணாதது தாம் இராமனது திருவுருவம்.

**மாருதி :**

மாருதி இராமனைக் கண்ட காட்சியிலே, அவனது தோளழகிலே நெஞ்சைப் பறிகொடுத்ததாக வான்மீகி முனிவர் பாடுகின்றார். இராமனின் தாமரைமலர் போன்ற கண்களிலே மாருதி தன் நெஞ்சைப் பறிகொடுத்ததாகக் கம்பர் பாடுகின்றார்:

" மஞ்செனத் திரண்ட கோல
 மேனிய மகளிர்க் கெல்லாம்
நஞ்செனத் தகைய வாகி
 நளிர்இரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சம்ஒத்து அலர்ந்த கண்ண "

என்பது கம்பர் அருளிய கவின்மிகு பாடல்.

**சீதைப் பிராட்டி :**

இங்ஙனமே, அசோக வனத்தில் இராமனைப்பிரிந்து இருந்து புலம்புகின்ற சீதைப் பிராட்டியும், இராமனது வடிவழகையும் கண்ணழகையும் நடையழகையுமே சொல்லிச் சொல்லிக் கதறுகின்றாள்.

" தம் பத்மதள பத்ராக்ஷம்
 ஸிம்ஹ விக்ராந்த காமிநம்
தந்யா: பச்யந்தி மே நாதம்
 க்ருதஜ்ஞம் ப்ரியவாதிநம் "

என்ற இந்த ஒரு சுலோகத்தைச் சிந்தை செய்மின். இதில் 'பத்மதள பத்ராட்சம்' என்பதற்கு இன்சுவைப் பொருளைப் பெரியோர் கூறுவர். இங்கு பத்மதளம் என்றோ, பத்மபத்ரம் என்றோ ஒன்று சொன்னாலே போதும்; தளமும் பத்ரமும் பரியாயம் ஆகையாலே. 'தளபத்ராட்சம்' என்று இரண்டையும் கூட்டிச்சொன்னது ஏன்? என்று விசாரம் செய்யப் பிராப்தம் ஆகும். நம்மாழ்வார் திருவாய்மொழியில் ''செங்கமலத்து அலர் போலும் கண் கை கால் செங்கனிவாய், அக்கமலத்து இலை போலும் திருமேனி அடிகளுக்கே'' என்று அருளிச் செய்தது, மேலே குறித்த வான்மீகியின் வாக்கைத் தழுவியே என்பர் பெரியோர். எங்ஙனே என்னில், வடமொழியில் அட்சம் என்கிறசொல்லுக்கு ''அக்ஷம் இந்த்ரிய காயயோ: என்கின்ற நிகண்டின்படி, கண் என்றும் வடிவு என்றும் இரண்டு பொருள்கள் உண்டு. இரட்டுற மொழிதல் என்னும் தமிழ் முறைப்படி 'பத்மதள பத்ராட்சம்' என்ற இவ்விடத்தில் அட்ச பதத்திற்கு இவ்விரண்டு பொருளும் கொள்ளத்தகும். 'பத்மதளம் போன்ற கண்ணழகு உடையவர்; பத்மபத்ரம் (தாமரை இலை) போன்ற திருமேனியை உடையவர் என்றதாயிற்று. மேலே குறித்த நம்மாழ்வார் பாசுரம் இதற்குச் சார்பாய் இருக்கின்றதன்றோ?

ஆண்டாள் :

கண்ணபிரானையே காதலிக்குமவள் ஆன ஆண்டாளும், இராமனுக்கு 'மனத்துக்கினியான்' என்று திருநாமம் சாத்துகின்றாள். திருப்பாவையில் "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான்" என்று அருளிச்செய்தது காண்க. "பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானை" என்று, அவ்வாண்டாளே அருளிச் செய்துள்ளபடி, அவலீலையாகக் கொன்றொழிக்க வேண்டிய இராவணனை, இராமன் மிகவும் தாமதித்துப்பிரயாசப்பட்டுக்கொன்றதாகக் கதை காண்கிறது. அதன் காரணத்தையும் விவரிப்பது போன்றுள்ளது, "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான்" என்ற ஆண்டாள் பாசுரம். இதன் உட்கருத்து என்னென்னில் "பஞ்செனச் சிவக்கும் மென்கால் பாவையைப் பிரித்த பாவி" வஞ்சனை இராவணனைக் கொன்றொழித்தே விடவேண்டும் என்கிற திருவுள்ளம் இராமனுக்கு இருந்ததாகில், கடலில் அணைகட்டி இலங்கைக்கு வரவேணும் என்பது இல்லை; தன் அழகைக் காட்டியவாறு அவனை வசப்படுத்திக் கொள்ள வேணும் என்கிற திருவுள்ளமே இராமனுக்கு இருந்தது.

"சூதனாய்க் கள்வன் ஆகித்
தூர்த்தரோ டிசைந்த காலம்
மாதரார் கயற்கண் என்னும்
வலையுட்பட் டழுந்து வேனைப்
போதரே என்று சொல்லிப்
புந்தியிற் புகுந்து தன்பால்
ஆதரம் பெருக வைத்த
அழகன்"

என்றபடி, எப்படிப்பட்ட விமுகர்களையும் தன்பால் ஈடுபடுத்திக் கொள்ளவல்ல அழகு தனக்கு இருப்பதனால், அவ்வழகைக் காட்டி இவ்வரக்கனையும் மயக்கி விடலாம் என்கிற மயக்கமே இராமனுக்கு இருந்தது. இவ்வழகை அப் பாவி மதித்திலன். ஆகையாலே சினம் உண்டாயிற்று; அந்தச் சினத்தினால் இனி இவனை உயிரோடு வைக்கலாகாது என்று செற்றனன்; அவன்தான் மனத்துக்கினியான்; உள்ளங்கவர்கள்வன் (சித்த அபகாரி) ஆன அழகை உடையவன் என்பது ஆழ்ந்த கருத்து.

ஏகப்பிரிய தரிசனன் :

"ஏகப்பிரிய தர்சநன்" என்கிற மூலத்திற்கு இதுகாறும் உரைத்தபொருள் 'இராமன் இனிமையாகக்கண்டு கொண்டிருக்கத் தக்கவன்' என்பது. இனி இச்சொல் மற்றொரு வகையாகவும் பொருள் படும். 'இராமனைப் பிறர் காண்பது இனிது' என்கிற பொருளும் பொருந்தும் ஆதலால், அப்பொருளும் இங்குக் கொள்ளத்தகும். அயோத்தியா காண்டத்தில் (17-14) அற்புதமான ஒரு சுலோகம் உள்ளது. அதாவது

"யச்ச ராமம் நபச்யேத் து
யஞ்ச ராமோ ந பச்யதி
நிந்திதஸ் ஸ வஸேல் லோக
ஸ்வாத்மாப் யேநம் விகர்ஹதே"

என்று. இதன் பொருளாவது: "இராமனைக் காணாதவனும் இராமனால் காணப்படாதவனும் உலகில் நிந்திக்கத்தக்கவன் ஆவன்; உலகத்தார் நிந்திப்பது கிடக்கட்டும்; தன்னைத்தானே நிந்தித்துக் கொள்ள வேண்டியதும் ஆகும்" என்றபடி. இதனால் இராமனைக் காண்பது போல இராமனால்காணப்பெறுவதும் புருஷார்த்தம் என்று தேறுதலால், ஏகப் பிரிய தர்சநன் என்பதற்கு 'இராமன் பிறரைக் காண்பது மிகவும் இனிதாயிருக்கும்' என்று கருத்துக்கொள்வதும் மிகமிகப் பொருத்தமுடைத்தாகும்.

சபரி :

இதற்குச் சார்பாக ஓர் இடம் காட்டுவோம்; இராமன் சபரியினுடைய ஆச்சிரமத்திற்கு எழுந்தருளி அவளைக் கடாட்சித்து அருளினவாறே, அவள் கூறுகின்றாள்.

"சக்ஷுஷா தவ ஸௌம்யேந
பூதாஸ்மி ரகுநந்தந"

என்று. 'இராமா! உன்னுடைய குளிர்ந்த கடைக்கண் பார்வை என் மீது பட்டவாறே நான் பரம பரிசுத்தி பெற்றவளாயினேன்' என்றாள். திருப்பாவையில் "அங்கண் இரண்டுங்கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேற் சாபம்இழிந்தேலோர் எம்பாவாய்' என்றருளிச் செய்த பாசுரமும் இதற்குச் சார்பாக நோக்கத் தக்கது.

ஆக, விரும்பிக்காணத்தக்க அழகுடையான் என்றும், அன்பர்களை விரும்பிக் காண்பவன்என்றும், இங்கு இருவகையான பொருளையும் விவரித்தோமானோம்.

(தொடரும்)

# வரகுண பாண்டியனின் கல்வெட்டு

திரு. சீனி. வேங்கடசாமி அவர்கள், திருமயிலை, சென்னை.

இரண்டாம் வரகுண பாண்டியன் கி. பி. 862-ஆம் ஆண்டில் முடிசூடிப் பாண்டிய நாட்டை அரசாண்டான். ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்த இவன், மிக்க சிவபக்தியுள்ளவன். இவன் காலத்துக்கு முன்னே (ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு முன்புதான்), அப்பர் சுவாமிகளும் திருஞானசம்பந்த சுவாமிகளும், தமிழ் நாடெங்கும் பக்தி இயக்கத்தைப் பரப்பிச் சைவ சமயத்தை வளர்த்துச் சென்றனர். இந்தப் பாண்டியனின் காலத்திலே பக்தி இயக்கம் மறைந்துவிடவில்லை. இவன் காலத்திலே சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாழ்ந்திருந்து, சமயப் பிரசாரம் செய்தனர். இவனுடைய காலத்தில் அரசியல் குழப்பங்கள் அதிகமாக இருந்தன. இவன் பகையரசருடன் பலபோர்களைச் செய்ய வேண்டியவனாக இருந்தான். ஆனால் அந்தப் போர்களுக்கு இடையேயும், சிவபக்தனான இவன் சைவத் தொண்டுகளைச் செய்துகொண்டிருந்தான். வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய திருவிளையாடல் போன்ற சில திருவிளையாடல்கள், இவன் காலத்தில் நிகழ்ந்ததாகத் தெரிகின்றது.

திருச்செந்தூரில் உள்ள முருகப் பெருமான் திருக்கோயிலில், வரகுணபாண்டியனுடைய நீண்டகல்வெட்டுச்சாசனம் ஒன்று காணப்படுகின்றது. இவன் திருச்செந்தூர் முருகப்பெருமானுக்கு நித்தியக் கட்டளை அமைத்ததை, இந்தச் சாசனம் கூறுகிறது. 1400 பொற்காசுகளை, இவன் இந்தக் கோயிலுக்குத் தானம் செய்து, அக்காசு முதல்கெடாமல் அதன் வட்டிப் பணத்திலிருந்து நித்திய பூசை நடைபெற ஏற்பாடுசெய்ததை, இச்சாசனத்திலிருந்து அறிகிறோம். இந்தப் பாண்டியனிடத்தில் அலுவலர்களாக இருந்த இருப்பைக்குடிக் கிழவன், அளற்று நாட்டுக்கோன், சாத்தம் பெருமான் என்பவர்களிடம் இந்தப் பொற்காசுகளைக் கொடுத்தனுப்பி, நித்திய பூசைகள் நடைபெறுவவற்கு இவ்வரசன் ஏற்பாடு செய்தான். இதிலிருந்து அந்தக் காலத்தில் (1100 ஆண்டுகளுக்கு முன்னரே), திருச்செந்தூர் முருகப் பெருமான் கோயிலில் நடைபெற்ற நித்தியபூசைகளின் விவரம் நன்கு தெரிகின்றது. அதனைக் கீழே தருகிறோம்:-

சுப்பிரமணிய படாரர் கோயில், திருமூலத்தானத்துப் படாரர்க்கு உரிய நித்தியப்படி விவரம் பின்வருமாறு:-

திருவமுது: அரிசி, செந்நெற்றீட்டல் ஒருவேளைக்கு நானுழியாக, நான்கு வேளைக்கு அரிசி பதினறுநாழி.

நெய்யமுது: திருவமுதுக்குப் பசுவின் நறுநெய், ஒரு வேளைக்கு உழக்கு, "கறி துமிக்கவும் பொரிக்கவும் ஒருவேளைக்கு ஆழாக்காக நான்கு வேளைக்கு நெய்யமுது நாழிஉரி."

தயிரமுது: நிவேதிக்கத் தயிரமுது ஒரு வேளைக்கு நாழி. கட்டுத்தயிர் அமுது ஒரு வேளைக்கு உரி. ஆகநான்கு வேளைக்குப் பசுவின் தோய் தயிர் ஆறுநாழி.

வாழைப்பழ அமுது: ஒருவேளைக்கு நான்கு பழமாக நான்கு வேளைக்கு வாழைப்பழம் பதினறு.

சர்க்கரைஅமுது: ஒருவேளைக்கு ஒருபலமாக நான்கு வேளைக்கு நான்குபலம்.

கறிஅமுது: காய்கறி ஒன்று, புளிங்கறி ஒன்று, புழுக்குக் கறி ஒன்று, பொரிக்கறி ஒன்று, ஆகக் கறி அமுது நான்கினுக்கு ஒருவேளைக்குப் பத்துப்பலமாக நான்கு வேளைக்குக் கறி அமுது நாற்பதுபலம்.

காயம்: மிளகு அமுது, மஞ்சளமுது, சீரக அமுது, சிறுகடுகு அமுது, கொத்தம் பரி அமுது; ஆகக்காயம் ஐந்து. இவை ஒருவேளைக்கு முச்செவிடாக நான்கு வேளைக்குக் காயம் உழக்கே இரு செவிடு.

கும்மாயம்: (கும்மாயம் என்பது சிறு பயற்று அவியலுடன் வெல்லமும் நெய்யும் கலந்து செய்வது). இதற்குச் சிறு பயற் றுப்பருப்பு ஒருவேளைக்கு உரியாக நான்கு வேளைக்கு இருநாழி சிறுபயிறு.

இலைஅமுது: (இது இலையமுது என்றும், வெற்றிலை அமுது என்றும் கூறப்படும்). ஒருவேளைக்கு மூவடுக்காக நான்கு வேளைக்கு வெற்றிலை அமுது மூன்று பற்று''.

அடைக்காயமுது: (பாக்கு அமுது). ஒரு வேளைக்குப் பதினுன்கு. நான்கு வேளைக்கு அடைக்காயமுது ஐம்பத்தாறு.

திருநந்தா விளக்கு: விளக்கு ஒன்றுக்கு உரிநெய். ஐந்து திருவிளக்குப் பசுவின் நறு நெய் நியதி இருநாழி உரி.

திருமஞ்சனம்: (அபிஷேகம்) பசுவின்பால் நியதி (நாள் ஒன்றுக்கு) நானுழி, பசுவின் தயிர் நானுழி, இளநீர் வழுவை உட்பட நாழி இள நீருக்கு நான்கு இள நீராக நியதி இள நீர் எட்டு.

திருப்பள்ளித்தாமம்: பூமாலை. நாள் தோறும் அளக்கக்கடவ நறும்பூ பத்து நாழி.

பயற்றுப்பொரி: சிறுபயற்றுப் பொரிக்காக நாழிஉழக்கு.

பற்றுமஞ்சள்: திருமேனிபூசி அருளமேற் ரேல் சிதைத்த பற்று மஞ்சள் நியதி உழக்கு.

வெண்கூறை: (கூறை-ஆடை). மூன்று மாதத்துக்கு நான்கு இணை (ஜோடி)யாக ஓராண்டு நான்கு முறைக்கு வெண்கூறை பதினறு இணை.

மேற்கட்டிப் புடவை: திருமடைப்பள்ளிக்கு மேற்கட்டியாகப் புடவை (துணி) இரண்டு. ஆறு திங்களுக்கு ஈரிணை; ஓராண்டு இரண்டு முறைக்குப் புடவை நால்இணை.

தூபம்: ஸ்ரீதூபம் சீதாரியினுக்கு வேண் டும் உறுப்பு அகில் உட்படக் கற்பூரமும் தேனும் நியதி அரைக்காணம் விலைபெற இடுவது.

மேற்கட்டு வெண்கூறை: கர்ப்பக்கிருகத் துக்கு மேற்கட்டி வெண்கூறை (துணி) இரண்டு. ஆறு திங்களுக்கு நாலு இணை யாக ஓராண்டு இரண்டு முறைக்கு வெண் கூறை எட்டு இணை,

திருப்பலி: திருப்பலிக்குப் பசுவின் தோய் தயிர் நாள் ஒன்றுக்கு நாழி.

கொற்று: தட்டளி கொட்டிகளுக்கு (வாத்தியம் வாசிப்போருக்கு), கொற்று (சோறு), திங்கள் ஒன்றுக்கு நாலுகலம் பத்துக் குறுணி நாழி உரியாக, பன்னி ரண்டு திங்களுக்கு நெல்லுநிறைமதி நாராயத்தால் ஐம்பத்தேழுகலம்.

ஸ்ரீஉடையாடை: மூன்று திங்களுக்கு ஓர் இணையாக நான்கு முறைக்கு ஸ்ரீஉடை யாடை.

நாலிணை: இன்னெரு ஸ்ரீ உடையாடை ஆண்டுக்கு நாலிணை.

திருமஞ்சன நெய்: ''திருமஞ்சனம் ஆடி அருளப் பசுவின் நறுநெய் நியதி நான்கு நாழி''.

சந்தனக் குழம்பு: ''திருமேனி பூசும் சந்தனக் குழம்புச் சந்தனம் நியதி முப் பலம்''

கற்பூரம்: திருமேனி பூசும் திருச்சந்தனத் தோடு கட்டி அரைக்கும் கற்பூரம் நியதி ஏழரைக்காணம்.

திருமஞ்சன இளநீர்: ''திருமஞ்சனம் ஆடி அருள இளநீர் வழுவை (வழுக்கை)உட் பட, நியதி இருநாழியினுக்கு நாழிஇள நீருக்கு நாலிளநீராக, நியதி இடும் இள நீர் ''எட்டு''

[குறிப்பு: கற்பூர தீபம் இதில் குறிப்பிட வில்லை. அக்காலத்தில் கற்பூரத்தீபம் கோயில்களில் வழக்கத்தில் இல்லை போலும். அது பிற்காலத்தில் ஏற்பட்ட வழக்கமாக இருக்கலாம். தேங்காய் உடைப் பதும் குறிப்பிடப்படவில்லை. இதுவும் பிற்காலத்து ஏற்பட்ட வழக்கம் போலும்! தேவாரப் பாடல்களிலும் கற்பூர தீபாரா தனை குறிப்பிடப்பெறவில்லை].

சிவபக்தனுன வரகுண பாண்டிய னுடைய பக்தி, இந்தக் கட்டளையிலிருந்து நன்கு தெரிகிறது. இது சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாழ்ந்திருந்த 9-ஆம் நூற் ருண்டில் ஏற்பட்ட சாசனம் என்பதும் கருதத்தக்கது.

*

# "மாற்றி நின்றார் வழி"

சிவஸ்ரீ தத்புருஷ் தேசிகர் (பாலகவி) அவர்கள்,
தேவகோட்டை.

கடவுள் உயிர்களின் காட்சிக்கு அருமையாய் இருப்பவர். ஆனால் அவர் எவ்வாற்றாலும் காண முடியாத சூனியர் அல்லர். அவரையே கருதியிருந்து அவரின் வேறு காது விளங்கும் சிவஞானியர்க்கு அவர் மிக எளியவராக நிற்பார். ''காண்டற்கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய்'' என்பதும், ''காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே' என்பதும் முதலிய அருண்மொழிகள் கடவுளது அருமை, எளிமைகளைச் செவ்விதிற் புலப்படுத்திக் கொண்டிருக்கின்றன. உயிரறிவுடன் கடவுளறிவும், ஒன்றுபட்டுக் கூடினாலன்றி, உயிர் எதனையும் அறிய முடியாது. புறப்பொருள்களை அறியும் கண்ணொளியுடன் கதிரவனின் ஒளியும் ஒன்றுபட்டு உடன் கூடினால் அன்றிக் கண் எதனையும் காண முடியாதிருப்பது கொண்டு, இவ்வுண்மையை அறிந்து கொள்ளலாம்.

கண்ணொளியோடு மட்டும், கதிரவனின் ஒளி சேர்ந்திருந்து, காணப்படும் பொருளுடன் அது கலக்காதிருக்குமாயின், அந்த வேளையிலும், கண் பொருளைக்காண மாட்டாது. காண்பவனது கண்ணொளியுடன் கூடித்தானும் உடனிருந்து காணுகின்ற கதிரவனது ஒளி, காணப்படுகின்ற பொருளினிடத்தும் கலந்து நின்று, அதனைக் காட்டுகின்ற உதவியையும் செய்தல் வேண்டும். இங்ஙனமே கடவுளும் உயிர்களின் அறிவுடன் கலந்திருந்து எல்லாவற்றையும் காணுபவராகவும்; காணப்படும் எல்லாப் பொருள்களுடனும் கலந்திருந்து, அவற்றைக் காட்டுபவராகவும், உதவி புரிந்து வருகின்றார். இதனைச் சித்தாந்த சைவ நூல்கள் ''காணும் உபகாரம், காட்டும் உபகாரம்'' என்று இரண்டு வகைப்படுத்திச் சொல்லும்.

அறிவுமயமாகிய ஆன்மா, அநாதியே பற்றிய ஆணவமலத் தொடர்பினால், அவ்வறிவுத் தடையையும் அநாதியே உடையதாக இருக்கின்றது. ஆணவமலம் அதற்குரிய ஆவாரக சத்தி என்னும் மறைப்புச் சத்தியைக் கொண்டு, ஆன்மாக்களின் அறிவிச்சைச் செயல்களை அநாதியே மறைத்திருப்பதனால், அறிவு வடிவமாகிய சித்துவகையைச் சேர்ந்த ஆன்மாக்கள், அறிவற்ற சடப்பொருள்கள் போலக் கேவல காலத்தும், அறியாமை மிகுந்த பேதைமை நிலையினவாகச் சகல காலத்தும் அல்லறுகின்றன. கேவல நிலையிற் சடம் போல அறிவிழந்து கிடந்த உயிர்களினிடத்துச், சிவபெருமான் பேரிரக்கங் கொண்டு, சகல நிலையில் அவைகளை நிறுத்திக் காணுவதும் காட்டுவதுமாகிய உதவிகளைச் செய்து இடையீடின்றி அவற்றுடன் ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும், இருந்தருளுகின்றான்.

இங்ஙனம் எந்த வேளையிலும் பிரிப்பின்றிக் கலந்திருக்கின்ற இறைவனை, உயிர்கள் காண முடியாமலிருப்பதுவிந்தையேயாகும். பொருள்கள் புலப்படாமலிருப்பதற்கு இரண்டு காரணங்கள் இருக்கக்கூடும். ஒன்று பொருள்களின் இன்மை; மற்றொன்று அவையிருந்தும் காணும் ஆற்றல் காண்பார்க்கு இல்லாமை; இவ்விரண்டினுள், கடவுளைக்காண முடியாமைக்குக் காரணம் பின்னையதே யாகும். காண வேண்டும் பொருளாகிய கடவுளைக் காண்பவனாகிய ஆன்மா, காட்டுங்கருவியாகிய திருவருளைத் துணைகொண்டு காணமுயன்றால் வெற்றி உறுதியாகக் கிட்டும். ''காட்டும் திருவருளே கண்ணாகக் கண்டுபர வீட்டின்ப மெய்ப்பொருளை மேவும்நாள் எந்நாளோ'' என்பது தாயுமான அடிகள் திருவாக்கு.

திருவருளைத் துணையாகக் கொண்டு காண்பார்க் கன்றிச் சிவபெருமான் புலப் படுவதில்லையாகையால், அவனதுஉண்மை யைத் தேர்ந்து தெளிபவர் மிகச்சிலரா கவே யிருக்கின்றனர். அத்தகைய தெளிவை அடைந்தவர்களின் வழியி லேயே அவன் இடையீடின்றி நிலைபெற்று நின்றருளுவான். இதனைத் திருமூலதேவ நாயனுர், தமது திருமந்திரமாலைக் கடவுள் வாழ்த்தில், இருபத்து நான்காவது செய்யுளாகிய,

"போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனிதன் தன்னடி
தேற்றுமின் என்றும் சிவனடிக் கேசெல்வம்
ஆற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றிநின் ருர்வழி மன்னிநின் ருனே"

என்பதில் தெளிவு படுத்துகின்ருர்.

சிவபெருமானது திருவடியையன்றிப் புகலிடம் பிறிதொன்றில்லை என்னும் உறுதி, பலகோடி பிறப்புக்களிற் செய்த புண்ணிய மிகுதியினுலேயே உண்டாகும். அவ்வாறு தேடிச் சேர்த்த புண்ணிய மிகுதியை உடையவர்களே, சிவபெருமா னுடைய திருவடிகளைச் சரணடைந்து போற்றுவார்கள். ஓத வேண்டிய முறைப் படி ஒலி பிறழாமல் அவனது மந்திரங்களை ஓதுவார்கள். அளப்பரிய அவனது பெரும் புகழை உளங்குளிர எண்ணி உவகையுறு வார்கள். இங்ஙனம் மெய், மனம், மொழி ஆகிய திரிகரணங்களையும்சிவபெருமானது திருவடிக்கண் நிலைபெற வைத்தமையா லேயே, சிவஞானிகள் என்றும் தெளிவுடை யவர்களாய் வாழ முடிகிறது. அந்தத் தெளிவு அனைவருக்கும் வரவேண்டு மென்று ஆசிரியர் திருமூல தேவர் "போற் றிசைத்தும் புகழ்ந்தும் புனிதன்னடி தேற்றுமின் என்றும்" என்று முதற்கண் குறித்தருளினுர்.

இங்கே சிவபெருமான் "புனிதன்" என்று குறிக்கப் பெற்ருர். அவரல்லாத மற்ற எல்லாப் பொருள்களும், இயல்பா கவே புனிதமற்றனவாகவும், புனிதமற்ற வற்றைச் சார்ந்து புனித மிழந்தன வாகவும் இருப்பன. அவரொருவரே எக் காரணத்திஞலும் மாறுபடாத புனிதத் தன்மையை இயல்பாகவே உடையவரா யிருக்கின்ருர். மேலும் அவர் தம்மைச் சார்ந்த அனைத்தையும் புனிதமாக்கும் தனிச்சிறப்புடையவராயும் விளங்குவது, இங்கே நினைவு கூரத்தக்கதாகும்.

சிவமே பொருளெனத் தெளிந்த மெய் யன்பர்களுக்கு, உலகத்துப் பொருள்களைப் பொருள்களென்று கருதும் விபரீத உணர்வு விலகிவிடும். "கொன்றைத் தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே" என்பது திருமுறை. மெய்யடியார்கள், தம்மிடம் வந்தடைந்த செல்வத்தையெல்லாம், சிவபெருமான் தந்தவை என்று தெளிந்து அவற்றை அவனது திருவடிக்கே ஆக்குவார்கள். "தேடிய மாடும் நீடு செல்வமும் தில்லை மன்றுள் ஆடிய பெருமான் அன்பர்க் காவன ஆகும்" என்பார் சேக்கிழார் பெருமான்.

செல்வப் பற்றைச் சிவனடிப்பற்ருக மாற்றிக் கொண்டவர்களே, மயலுற்ற சிந்தையை மயலற்ற சிந்தையாக மாற்றிக் கொண்டவர்களாவார்கள். பசு புண்ணி யத்தின் பயனுக வந்த பொருளைப் போக நுகர்ச்சிக்கும், மேலும் பசு புண்ணியப் பேற்றிற்கும் செலவிட்டுப் பிறவிப் பெருங் கடலிலேயே மூழ்கித் தத்தளிக்க மெய்ஞ் ஞானியர் விரும்பார். "செல்வத்துப் பயன் சிவ புண்ணியப் பேறே" என்று தெளிந்து, சிந்தைமயக்கறுத்தவர்களின்வழியிலேயே, சிவபெருமான் நிலைபெற்று வீற்றிருப்பான். இவ்வுண்மை இத்திருப்பாடலின் பிற்பகுதி யால் அறியக் கிடக்கின்றது.

## செய்திச் சுருக்கம்

திருவிளக்குப் பூசை: சென்னை நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் சாலையிலுள்ள குமர கோட்டம் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி சேவார்த்திகள் சங்கத்தின் சார்பில், 9—8—68 அன்று, மிகவும் சிறப்புற நடைபெற்றது. தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், விழாவுக்குத் தலைமை தாங்கினுர்கள். 'திருக்கோயில்' ஆசிரியர் திரு. புலவர் ந. ரா. முருகவேள் M.A.,M.O.L. அவர்கள், 'முருகன் பெருமை' என்னும் பொருள்பற்றிச் சொற் பொழிவு ஆற்றினுர்கள். தாய்மார்களும் பக்தர்களும் பெருந்திரளாக வந்து கலந்துகொண்டு தரிசித்து மகிழ்ந்தனர். கோயில் அறங்காவலர் பெருமக்களும், மேனேஜர் திரு. நாராயண ஐயங்கார் அவர்களும், விழாவுக்குச் சிறந்த ஏற்பாடுகள் செய்திருந்தனர். —ஆசிரியர்.

# திருக்கோயில்

(தமிழக அரசின் அறநிலைய ஆட்சித்துறையின்
திங்கள் வெளியீடு)



## பத்தாம் ஆண்டு

(1967 அக்டோபர் முதல் 1968 செப்டம்பர் வரை)



பதிப்பித்து வெளியிடுபவர் :

ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை - 34.



அச்சிடுவோர் :

பார்க்கர் அச்சகம்,
11, பந்தர் தெரு, சென்னை-1.

## [திருக்கோயில் 10-ஆம் ஆண்டு இதழில் வெளிவந்த கட்டுரைகளின் பட்டியல்]

### ஆசிரியர் எழுதிய கட்டுரைகள்.

(1967 அக்டோபர் முதல் 1968 செப்டம்பர் வரை)

## பிற அறிஞர்கள் எழுதிய கட்டுரைகள்

## தனிக் கட்டுரைகள்



தமிழ்நாடு தெய்விகப் பேரவை நிர்வாகக் குழுக் கூட்டத்திற்குத் திருச்செந்தூரில் செந்திலாண்டவன் கலையரங்கில் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானங்கள் எழுந்தருளிய பொழுது, திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானத்தின் சார்பில், ஷி தேவஸ்தானம் தர்மகர்த்தர் குழுத் தலைவர் திரு. சிவ. ராம. அ. நடராஜ முதலியார் சிறப்பு வரவேற்புரை வாசித்து அளிக்கிறார்கள். *(31-5-68)*



திருப்பனந்தாள் மகா கும்பாபிஷேக விழாவில் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குரு மகா சந்நிதானம் அவர்களும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும், அன்பர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தல்
(5—7—68)

Edited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Admn.) Dept., Madras-34.
Printed at Parker Press, 11, Bunder Street, Madras-1.

